

# கம்பன் அடிப்பொடியாரின் நுண்ணாற்றலும் மண்டோதரியின் மாண்பாற்றலும்





அருட்கவிஞர் **அ. காசி**

# கம்பன் அடிப்பொடியாரின் நுண்ணாற்றலும் மண்டோதரியின் மாண்பாற்றலும்



அருட்கவிஞர் அ. காசி

அருப்புக்கோட்டை

**கம்பன் பதிப்பகம்**

4/A, சாரதி மாளிகை

ஆபிசர்ஸ் லைன்

வேலூர் - 4

கம்பன் அடிப்பொடியாரின் நுண்ணாற்றலும்
மண்டோதரியின் மாண்பாற்றலும்

முதற் பதிப்பு : மார்ச் 2009



கம்பன் அடிப்பொடியாரின் நூற்றாண்டு விழா 2009
காரைக்குடியில் வெளியிடப்படுகிறது.

**விலை : ரூ. 50/-**

---


- Title : KAMBAN ADIPPOTIYARIN NUNNATRALUM MANNDOTHARIYIN MANBATTRALUM
- Author : Arut Kavignar **A. KASI**, M.A., M.Ed.,
- Language : Tamil
- Subject : Literature
- Size : Crown 12.5 × 18.5 cm.
- Letter point : 11 point
- Edition : First Edition, March 2009
- Pages : 104
- Published by : KAMBAN PATHIPPAGAM
  4/A, Sarathy Mansions
  Officers Line, Vellore - 4
  ✆ : 2234844
- Price : Rs. 50/-

---

- Printed at : United Bind Graphics
  189, Royapettah High Road, Mylapore, Chennai - 600 004
  ✆ 044 - 24661807 ubg@hotmail.com



# வெளியீட்டுரை

வேலூர்க் கம்பன் கழகம், கடந்த முப்பத்திரண்டு ஆண்டுகளாகக் கம்பன் புகழ் பாடி, கன்னித் தமிழ் வளர்த்து - அரும்பணி ஆற்றி வருகிறது.

கம்பனைக் கற்றுத் துறை போய, அறிஞர்களை அழைத்துச் செவி நுகர்கனிகளை வழங்கிடச் செய்வ தோடன்றி, கண்வழி நுழைந்து, மனத்தினில் நிறைந்து என்றென்றும் சிந்தனையைத் தூண்டும் தேனடைகளென, நூல் வெளியிடுவதையும் தனது கடமையாக மேற்கொண் டுள்ளது.

அந்த வகையில், வேலூர்க் கம்பன் கழகம் - வேலூர் கம்பன் பதிப்பகத்துடன் இணைந்து, கம்பன் நூற்பணியாக, கம்பனைப் பற்றிய பல நூல்களை எழுதித் தரும்படியாக வேண்டுகோள் விடுத்தும் அதன் விளைவாக கிடைக்கப் பெறும் நூல்களைப் பதிப்பித்து, வெளியிட்டும் - அந்நூல் களை கம்பன் விழாக்களின்போது அறிமுகம் செய்வித்தும் வெளியிட்டும் அருந்தொண்டு புரிந்து வருகிறது.

கம்பன் அடிப்பொடியாரின் நுண்ணாற்றலும் - மண் டோதரியின் மாண்பாற்றலும் என்கிற இந்த நூலின் ஆசிரி யர் அருட்கவிஞர் அ. காசி அவர்கள் அருப்புக்கோட்டை கம்பன் கழகத்தில் செயலராக உள்ளார். கம்பனைப் பற்றி ஏற்கனவே அவர் ஆறு நூல்களை எழுதி வெளியிட்

டுள்ளார். 2005ம் ஆண்டில் அவருடைய கம்பன் உலக மகா கவி எனும் தலைப்பில் ஒரு நூலையும் 2007ம் ஆண்டில் அவருடைய கவிச்சக்கரவர்த்தி கம்பரின் திருக்கை வழக்கம் என்கிற நூலையும் 2008ம் ஆண்டில் கம்பராமாயணத்தில் விதியும் ஊழ்வினையும் என்கிற அவருடைய நூலையும் கம்பன் பதிப்பகம் மூலம் வெளியிட்டுள்ளோம். இப்போது கம்பன் பதிப்பகத்தின் சார்பில் அவருடைய இந்த நூலினை நான்காவது படைப்பாக வெளியிடுவதில் பெரிதும் மகிழ்கிறோம். ஆண்டுக்கு ஒரு நூல் என - எங்கள் பதிப்ப கத்தின் மூலம் அடுத்தடுத்து வெளியிடும் பெரும் பேற் றினை எமக்களித்து சிறப்பு செய்துள்ளார். அந்த அளவுக்கு எம்மீது அவர் வைத்துள்ள மதிப்பிற்கும் மரியாதைக்கும் வணங்கி மகிழ்கிறோம்.

இவ்வாண்டு, எங்கள் பதிப்பகத்தின் சார்பில் கம்பன் அடிப்பொடியாரின் நுண்ணாற்றலும், மண்டோதரியின் மாண்பாற்றலும் எனும் இந்நூலினை காரைக்குடி மணி மண்டபத்தில், கம்பன் திருநாளின் போது - கம்பன் அருட் கோவில் இடம் பெற்றுள்ள காரைக்குடி பகுதியில் காரைக் குடி நகரில் அமரர் அண்ணார் கம்பன் அடிப்பொடியாறின் நூற்றாண்டு விழாவின் போது வெளியிடுவதில் பெரிதும் பெருமைப்படுகிறோம்.

அதிலும் மிகச்சிறப்பாக அமரர் கம்பன் அடிப்பொடியா ரின் நூற்றாண்டு விழா மகோன்னதமான ஏற்பாடுகளுடன் அமைந்து கோலாகலமாக நடைபெறவுள்ள இவ்வாண்டு கம்பன் திருநாளின் போது இந்நூலினை வெளியிடும் பேறு கிட்டியதில் பெருமிதம் அடைகிறோம். இறையருளையும் கம்பனையும் வணங்கி மனநிறைவு பெறுகிறோம்.

இந்நூல் நூற்றாண்டு விழாவின் போது வெளியிடப் பெறுவது மிகுந்த ஏற்றமும் பொருத்தமும் உடையதாம். இந்த அரும்பெரும்பேற்றினை நல்கி எங்களைப் பெருமைப்

படுத்திய கம்பன் அடி சூடி கம்ப காவலர் கம்பர் சீர்பரவுவார பழ. பழநியப்பன் அவர்களுக்கு என்றும் நன்றிக் கடன் பட்டவர்களாவோம். பகவான் இராமகிருஷ்ணருக்கு ஒரு விவேகானந்தர் என்கிற வழியில் - அமரர் கம்பன் அடிப்பொடி அவர்களுக்கு வாய்க்கப் பெற்ற வழித்தோன்றல் சீர்மிகு பழ. பழநியப்பன் என்று இனங்கண்டு தமிழ் கூறும் நல்லுலகிற்கு நான் பெரிதும் மன நிறைவுடன் பிரகடனப்படுத்துகிறேன்.

கம்பன் மேல் அடியேன் கொண்டுள்ள பக்தியால் - பித்தால், அமரர் கம்பன் அடிப்பொடியாருடன் அடியேன் நெருங்கிப் பழகிய பெரும் பேற்றினால் அவரது எழுத்தோவியங்களை எல்லாம் சேகரித்து, திரட்டி, ஒன்று சேர்த்து எந்தை பிரான் கம்பன் எனும் தலைப்பில் அவர் எப்போதும் உச்சரிக்கும் அத்திருமந்திரவாக்கினையே தலைப்பாக வைத்து ஒரு தொகுப்பு நூலை வெளியிட்டேன். அந்நூலுக்கு கம்ப ரசிகர்களிடையே நல்ல வரவேற்பு கிடைத்தது. எண்ணற்றோர் மதிப்புரை வழங்கியும், பாராட்டுரை வழங்கியும் அந்நூலினைப்பற்றியும் அடியேனின் முயற்சிப் பற்றியும் வெகுவாக சிலாகித்து பாராட்டியுள்ளனர். அவைகளையெல்லாம் ஒரு சேர மொத்தமாக எதிர்காலத்தில் வெளியிட உத்தேசித்துள்ளோம்.

இந்தக்கட்டத்தில் அருட்கவிஞர் அ. காசி அவர்களின் இந்த மதிப்புரை திறனாய்வு உரை கிடைக்கப் பெற்றதும் அதனை தனியாகவே வெளியிட இப்போது இதனை கொண்டுவந்துள்ளோம்.

அருட்கவிஞர் அவர்களின் இந்த திறனாய்வு உரையினை - மதிப்புரையினை படித்தால் நிச்சயம் இதற்கே அவருக்கு முனைவர் பட்டம் வழங்கி சிறப்பிக்கலாம் என்கிற முடிவுக்கு வர அமையும்.

ஆழ்ந்த ஈடுபாடுடன் - நுண்மான் நுழைபுலத்துடன் அருட்கவிஞர் முழுவதுமாக படித்து அதிலேயே ஒன்றி இதனை எழுதியுள்ளது படித்தவுடன் யாவரும் உணர முடியும்.

கம்ப ரசிகர்களும், தமிழ் இலக்கிய உலகமும் இதனைப் படித்து பயன்பெற வேண்டும் - கம்பனின் தனிப்பெரும் சிறப்பினைத் துய்த்துணர வேண்டும் - கம்பன் அடிப்பொடியாரின் மேதாவிலாசத்தை கம்பன் அடிப்பொடியாரின் கம்ப பக்தியை கம்பன் உள்ளத்தை அறிய வேண்டும் எனப் பெரிதும் விரும்புகிறோம்.

இந்நூலினை வடிவாக்கி, அச்சிட்டு, மிகக்குறுகிய காலத்திலேயே தயாரித்து வழங்கிடும் பொறுப்பினை மலர்ந்த முகத்துடன் ஏற்று அவ்வாறே நூலினை செம்மையாக அமைய அனைத்துப் பொறுப்புக்களையும் மனமுவந்து ஏற்று குறித்த காலத்தில் ஒப்படைத்த ஆற்றல் மிகு சகோதரர் சீர்மிகு கௌதம சங்கர் - உரிமையாளர், யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் - அவர்களுக்கு எங்களின் ஆழ்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம். இந்நூலுக்கு அரிய வாழ்த்துரை வழங்கிய சீர்மிகு T.R. தினகரன் அவர்களுக்கும் எங்கள் நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

நாடறிந்த சிறந்த கவிஞர் - கம்பன் மீது அளவிளாப் பற்றுள்ள கம்பரசிகர், கம்பனைப் பற்றி வெளிவரும் நூல்கள் அனைத்தையும் முதலிலேயே வாங்கி படித்து மகிழும் கம்பரசிகரை எமது கம்பன் பதிப்பகத்தின் சார்பில் அவரது நூல் நான்காம் முறையாக வெளியிடப்படுகிறது. இது இந்நூல் அவரது 63-வது படைப்பாகும்.

கம்பர் பித்தன்

வேலூர் **எஸ். என். குப்புசாமி முதலியார்**

*உரிமையாளர் : கம்பன் பதிப்பகம்*



T.R. தினகரன் B.E.,
உரிமையாளர்
ஸ்ரீ இராமலிங்கா மில்ஸ் லிமிடெட்
அருப்புக்கோட்டை
தலைவர் & புரவலர்
அருப்புக்கோட்டை கம்பன் கழகம்

## வாழ்த்துரை

அருட்கவிஞர் காசி இயற்றிய கம்பனடிப்பொடியாரின் நுண்ணாற்றலும் - மண்டோதரியின் மாண்பாற்றலும் எனும் நூலைப் படித்து மகிழ்ந்தேன்.

கம்பன் அடிப்பொடியார் சா. கணேசன் எழுதிய கட்டு ரைகளைத் தொகுத்து எந்தை பிரான் கம்பன் எனும் தலைப் பில் வெளியிட்ட நூலுக்கு கம்பர் பித்தர் S.N. குப்புசாமி முதலியாரின் அரிய தொகுப்பு நூலை படித்துத் தந்த ஆய்வு ரையினை படித்தறிந்தேன். அந்த திறனாய்வில் அமைந்த மதிப்புரையினை போற்றுகிறேன். வாழ்த்துகிறேன்.

இவண்
T.R. தினகரன்
1.3.2009



## நூலாசிரியர்ரைப்பற்றி

| | | |
|---|---|---|
| பெயர் | : | அ. காசி |
| கல்வித் தகுதி | : | எம்.ஏ., எம்.எட் |
| கல்விப் பணிகள் | : | 1. இடைநிலை ஆசிரியராக 16 ஆண்டுகள் பணி<br>2. இரண்டாம் நிலைத் தமிழாசிரியராக 6 ஆண்டுகள் பணி<br>3. மேல்நிலைத் தமிழாசிரியராக 16 ஆண்டுகள் பணி<br>1994-இல் ஓய்வு மொத்தம் 38 ஆண்டுகள் பணி |
| ஆசிரியர் முதல் நூல் | : | காமராசர் வெண்பா பத்து - 1971-ஆம் ஆண்டு. இந்நூல் 63 -வது படைப்பாகும். |
| பெற்ற விருதுகள் | : | கவிச்சக்கரவர்த்தி சீர் பரவுவார் - அனைத்துலகத் தமிழ் மாமன்றம் ஜூலை 2001 சின்னாளப்பட்டி<br>வாரியார் விருது - ஈரோடு தமிழ்ச்சங்கம் பேரவை - அக்டோபர் 2002 |

*பாரதி விருது - மாமதுரக் கவிஞர் பேரவை மதுரை - 2003*

*புலவர் மாமணி - வேலூர்க் கம்பன் கழகம்*

| | | |
|---|---|---|
| *பெற்ற பட்டங்கள்* | : | *பேரா. தா.கு. சுப்பிரமணியம் 1979-ல் வழங்கிய பட்டம் அருட்கவிஞர்* |

*அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், சென்னை வழங்கிய பட்டம் பாரதி பணிச் செல்வர்*

*சென்னை இதயரோஜா பதிப்பகத்தார் 1996-ல் வழங்கியது கவிச்சாரல்*

*ஈரோடு தமிழ்ச் சங்க பேரவை 2000-ல் வழங்கியது கவித் தமிழ்க்கோமான்*

***

# மதிப்புரை

## ஏந்தை பிரான் கம்பன்

''அணுவைத் துளைத்து ஏழ் கடலைப் புகட்டிக் குறுகத் தரித்தகுறள்'' என்று குறளின் பெருமையை, நுட்பங்களை ஔவையார் கூறக் காணுகின்றோம். அதேபோல் கம்பர் இயற்றிய இராமாயணத்தின் நுட்பங்களை நாம் அறிய, கம்பரைப் பற்றிய கட்டுரைகள் எல்லாம் உள்ளடங்கிய ஒரு நூல் ''எந்தை பிரான் கம்பன்'' என்ற அரிய படைப்பு நூலாகும்.

கம்பருக்கு மணிமண்டபம் எழும்பியதால், அங்கு விழாக்கள் நடத்தி, தமிழக எல்லா பகுதிகளுக்கும் அழைப்பு அனுப்பி ஒன்று கூடச் செய்து, கம்பன் யுகத்தை உருவாக்கிய பெருமை கம்பனடிப் பொடியார் அமரர் சா. கணேசனையே சாரும்.

இப்பொழுது தமிழகத்தின் அனைத்து மாவட்டங்களிலும் கம்பன் விழாக்கள் நடைபெறவும், கம்பன் கழகங்கள் தோன்றிடவும் வித்திட்டவர் அமரர். சா. கணேசனாகிய கம்பனடிப்பொடியார் ஆவார். காரைக்குடியில் தாய்க்கழகத்தை ஏற்படுத்தி ஆண்டுதோறும் - கடந்த 65 ஆண்டுகளாக கம்பன் விழா நடைபெறப் பாதை வகுத்தவர் அமரர் சா. கணேசனே ஆவார்.

தமிழகத்தின் அனைத்து ஊர்களிலும் நடைபெறும் விழாக்களை கம்பன் விழா என்றே அழைப்பார்கள். ஆனால் கம்பனடிப்பொடியார் ஒருவர்தான் கம்பன் விழாவினைக் ''கம்பன் திருநாள்'' என்று குறிப்பிட்டவர் ஆவார். அதோடு மட்டுமல்ல, கம்பன் சமாதி அமைந்துள்ள நாட்டரசன் கோட்டை பகுதியினை ''கம்பன் அருட்கோவில்'' என்று குறிப்பிட்டவர் அவரே ஆவார்.

எந்தை பிரான் கம்பன் என்ற நூலில் இடம் பெற்றுள்ள கட்டுரைகள் பெரும்பாலும் கம்பன் விழா மலர்களில் வெளி வந்தனவாகும். வானொலியின் அமரர். சா. கணேசன் உரையாற்றிய இரு கட்டுரைகள் இணைக்கப் பெற்றுள்ளன. கோவை, புதுச்சேரி, புதுக்கோட்டை கம்பன் விழாவில் - அமரர். சா. கணேசன் அவர்கள் கொடுத்த கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. இராஜபாளையம் கம்பன் கழகத்திற்கு அமரர். ச. கணேசன் கொடுத்த கட்டுரை ''பாலகாண்டம்'' என்ற கட்டுரையாகும்.

ஏடு தேடித்தந்த செம்மல் என்று போற்றப்படுபவர் உ.வே. சாமிநாத ஐயர் ஆவர். அவர் பல இடங்களிலும் முயன்று இலக்கிய நூல்களை வெளியுலகத்திற்கு கொண்டு வந்த பெரியார் ஆவார்.

உ.வே. சாமிநாத ஐயரைப் போல - வேலூர் கம்பன் கழக நிறுவனர் கம்பர்பித்தன் என்று போற்றப்படும் S.N. குப்புசாமி முதலியார் அவர்களின் விடா முயற்சியாலும், பல கம்பன் கழகங்களுக்கு நேரில் கலந்து கொண்ட காரணத்தினாலும் பல தலங்களிலும் வெளியிட்ட கம்பன் விழா மலர்களையும் தேடிக் கண்டுபிடித்து அவைகளில் கம்பனடிப்பொடியார் என்று போற்றப்படும் அமரர் சா. கணேசன் அவர்களின் எழுத் தோவியங்களாகிய கம்பன் கட்டுரைகளை தொகுத்துத் தந்த சிறந்த நூலே ''எந்தை

பிரான் கம்பன்'' என்ற நூலாகும்.

காரைக்குடி அமரர் சா. கணேசன் - கம்பன் அடிப் பொடியார் 1938-ல் காரைக்குடியில் கம்பன் கழகத்தைத் தோற்றுவித்த வித்தகர் ஆவர். அவருடைய வேண்டுகோளின் படிதான் S.N. குப்புசாமி முதலியார் வேலூரில் 1977-ல் கம்பன் கழகத்தைத் தொடங்கி, இன்றளவும் சிறப்பாக நடத்தி வருகிறார். 80 வயதுடைய S.N. குப்புசாமி முதலியாருக்கு ''கம்பர்பித்தன்'' என்ற விருதை வழங்கிச் சிறப்பித்தவர் கம்பனடிப் பொடியாரே ஆவார்.

கம்பர்பித்தன் குப்புசாமி முதலியாரின் அயராத முயற்சியால்தான் கம்பனடிப் பொடியாரின் கட்டுரைகள் எல்லாம் ஒன்று திரட்டப் பெற்று, ''எந்தைபிரான் கம்பன்'' என்ற நூல் உருவாகியுள்ளது.

கம்பர்பித்தன் இந்நூலை உருவாக்கப் பெரிதும் ஊக்கம் அளித்து உதவியவர் தமிழ்க் காவலர் திரு. சங்கரசீத்தாராமன் ஆவார். கம்பனுக்கு அன்று உதவிய சடையப்ப வள்ளல் போல் இன்று கம்பன் புகழைப் பரப்ப உதவியாக இருப்பவர் கம்பர் சீர் பரவுவார் - சங்கரசீத்தாராமன் ஆவார். தமிழகத்தில் கம்பன் தொடர்பான விழாக்களுக்கும், நற்பணிகளுக்கும் ஆதரவு நல்கி வேண்டுவன செய்யும் தெய்வத் தமிழ்க் காவலரும், மதுரை விஸ்வாஸ் கலைப்பண்பாட்டு அறக்கட்டளை நிர்வாக இயக்குனரும் ஆகிய உயர்திரு. சங்கரசீத்தாராமனுக்குத் தமிழ் உலகம் என்றும் கடமைப்பட்டுள்ளது. மேலும் இராஜபாளையம் கம்பன் கழகச் செயலாளரும் முத்தமிழ்த் தொண்டரும் ஆகிய உயர்திரு என்.எஸ். முத்துக்கிருஷ்ணராஜா அவர்களும் கம்பர் பித்தருக்குத் துணையாயிருந்து அச்சிடுவதிலும் பேருதவி

செய்து, கம்பன் பணியாற்றி வருகிறார் என்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

"எந்தைபிரான் கம்பன்" நூலிற்கு முதற்பதிப்பின் போது பேராசிரியர், நாவுக்கரசர், முனைவர். திரு. சோ. சத்தியசீலன், எம்.ஏ., திருச்சி அவர்கள், மதிப்புரை நல்கி சிறப்பித்தார்கள். அதேபோல் பேராசிரியர், முனைவர், தெ. ஞானசுந்தரம் - சென்னை, அவர்கள் முதல் பதிப்பிற்கு அணிந்துரை நல்கிச் சிறப்பித்தார்கள். பெரிய மலையின் இரு சிகரங்களுக்கு முன்னால் சிறு குன்றாகத் தாழ்ந்து நிற்கும் அடியேனுடைய எளிய மதிப்புரையாகிய விருந்துணவை இப்பொழுது புசிக்கக் கொடுத்துள்ளேன். இந்தச் சிறிய வாய்ப்பினை நல்கிய பேரறிவாளர் கம்பர்பித்தன் S.N. குப்புசாமி முதலியார், பி.ஏ., அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*கன்னித் தமிழ் வாழ்க!*

*கம்பன் புகழ் ஓங்குக!*

இப்படிக்கு

அருட்கவிஞர் **காசி,** எம்.ஏ.,

அருப்புக்கோட்டை

# ஏந்தை பிரான் கம்பன்

## பொருளடக்கம்

***

# 1. கம்பர் மலர் வணக்கம்

தெய்வ வழிபாட்டில் மலர்தூவி 108 போற்றி வழிபாடு, முக்கிய இடத்தைப் பெறுகிறது. அதேபோல "எந்தை பிரான் கம்பன்" என்ற தொகுப்பு நூலில், கம்பனடிப் பொடியார் மூன்று மலர் வணக்கப் பாடல்களைத் தொகுத்தளித்து இருப்பதைக் காணுகின்றோம்.

அவை 1. கம்பன் மலர் வணக்கம். 2. முப்பெரும் புலவர் மலர் வணக்கம் 3. தமிழ்த்தாய் மலர் வணக்கம் என்பனவாகும்.

கம்பன் மலர் வணக்கத்தில் முதற்கண் "உலகம் யாவையும்" என்று தொடங்கும் கடவுள் வாழ்த்துப் பாடலை அமைத்து பின் இரண்டடிக்கொருதடவை எதுகை மோனை பயின்றுவரச் செய்து 108 போற்றிகளை அமைத்திருப்பது அருமையிலும் அருமையாகும்.

கம்பர் பிறந்த ஊர் திருவழுந்தூர். அங்கு அந்தணர்கள் மிகுந்துள்ளனர் என்பதைச் சுட்டிக்காட்டும் வகையிலும் ஆரம்பத்தில்

"திருவழுந்தூர்வரு தேவே போற்றி!
அருள்வழி உணர்த்துபேர் அந்தண போற்றி!"

என்று போற்றி மலர் தூவுகிறார், கம்பனடிப்பொடியார்.

அயோத்தியை ஆண்ட தசரதன் தான் உடலாகவும் மக்களே உயிராகவும் கொண்டு ஆட்சிபுரிந்தான் என்பதை 99-100 வது வரிகளில் காணுகின்றோம்.

''மக்களே உயிர்என வகுத்தனை போற்றி!
மன்னனை உடலென மாற்றினை போற்றி!

என்பதே அவ்வரிகள் ஆகும்.

கம்பர் நாட்டரசன் கோட்டையில் விரும்பிச் சென்று சமாதியானார் என்பதை இறுதி இரு அடிகள் சுட்டக் காணுகின்றோம்.

''நாட்டரசன் கோட்டை நயந்தாய் போற்றி!
போற்றி கம்பனே போற்றி போற்றி!''

என்பன இறுதி இரு அடிகளாகும்.

நிறைவில் வாழ்த்து விருத்தம் ஒன்றினை அறுசீர் விருத்தமாக அமைத்தும், தமிழையும் வள்ளுவரையும் - கம்பரையும் வாழ்த்தும் வகையில் வெண்பா ஒன்றை அமைத்தும், இரு பாடல்களால் கம்பன் மலர் வணக்கத்தை முற்றுவிக்கக் காணுகின்றோம்.

***

## உ. முப்பெரும் புலவர் மலர் வணக்கம்

முப்பெரும் புலவர் மலர் வணக்கத்தில் முறையே 1. கம்பன் மலர் வணக்கம், 2. வள்ளுவர் மலர் வணக்கம், 3. இளங்கோ மலர் வணக்கம், என்று முப்பெரும் புலவர்களுக்கும் 108 போற்றிகள் பாடுகிறார் கம்பனடிப் பொடியார்.

ஏற்கெனவே தனித்தொகுப்பாகத் தந்த கம்பன் மலர் வணக்கப் பாடலையே முதலில் இங்கு நல்கக் காணுகின்றோம்.

அடுத்த வள்ளுவர் மலர் வணக்க ஆரம்பத்திலும் ''உலகம் யாவையும்'' என்று தொடங்கும் கடவுள் வாழ்த்துப் பாடலையே புகுத்தி அமைத்து சிறப்புவிக்கக் காணுகின்றோம்.

அடுத்த 108 போற்றிகளை எண் சீர் விருத்தங்கள் 14 பாட்ல்களைக் கொண்டு முற்றுவிக்க அறிகின்றோம்.

பதினான்காவது என் சீர்விருத்தத்தில் பாதியை நான்கு போற்றியாக அமைத்தும், பின் பாதியைக் கம்பனுக்கும், வள்ளுவருக்கும் வாழ்த்து விருத்தமாக அமைத்தும் நிறைவு செய்யக் காணுகின்றோம். இவ்வாறு அமைத்துப் பாடி யிருப்பது கம்பனடிப்பொடியாரின் ஆழ்ந்த அறிவைப் புலப்படுத்துகிறது.

முதற்கண் வள்ளுவர் பிறந்த ஊர் மயிலாப்பூர் என்பதைக் குறிக்க,

''திருமயிலை அவதரித்த தேவா போற்றி!
திருக்குறளை உபகரித்த செம்மால்போற்றி!''

என்று கூறி வள்ளுவர் மலர் வணக்கத்தை ஆரம்பிக்கிறார் கம்பனடிப் பொடியார்.

மூன்றாவதாக பெரும்புலவர் இளங்கோ மலர் வணக்கத்தின் ஆரம்பத்தில் ''உலகம் யாவையும்'' என்ற கடவுள் வாழ்த்துப் பாடலையே சரணமாக அமைக்கக் காணுகின்றோம்.

108 போற்றிகளை இரண்டடிக்கொரு எதுகை மோனை களைக் கொண்டு சிறப்பித்திருப்பதை அறிகிறோம்.

இளங்கோ, சேர இளவரசன் - பிறந்த ஊர் வஞ்சி - என்பதை முதற்கண் சுட்டிக்காட்ட,

''சேரர் குலந்தரு செல்வா போற்றி!
வீரவஞ்சியின் விளக்கே போற்றி!''

என்று போற்றி இசைக்கிறார் கம்பனடிப்பொடியார்.

இறுதி அடியில் இரண்டு போற்றிகளைப் பெய்கிறார்.

''இளங்கோ அடிகள் போற்றி போற்றி!

என்று கூறி நிறைவு மங்கள வாழ்த்துப் பாடலை நான்கு சீர் விருத்தத்தால் அமைத்து "வாழ்வோம்" என்று வாழ்த்துகிறார்.

***

## 3. தமிழ்த்தாய் மலர் வணக்கம்

கம்பனடிப்பொடியார் தமிழ்த்தாய் மலர் வணக்கத்திலும் 108 மலர்களைக் தூவி தமிழ்தாயை வழிபடக் காணுகின்றோம்.

"இவ்வுலகில் உயர்ந்தோர்களால் வணங்கப்படுவதும், உலக இருளை நீக்குவதுமாகப் போற்றப்படுவது இரண்டாகும். ஒன்று தனித்தன்மையுடன் பிரகாசிக்கும் சூரியனாகும். மற்றொன்று தனக்கு நிகரில்லாத தமிழ் மொழியாகும்" என்று வெண்பாவால் தமிழ்த்தாய்க்குக் காப்பமைத்துப்பின் 108 போற்றிகளைப் பாடுகிறார் கம்பனடிப்பொடியார்.

அகரத்தைக் கொண்டு தொடங்கும் சிறப்புடன், பழமைப் பெருமையும் வாய்ந்தது தமிழ்மொழியாகும் என்பதைக் கூறவந்த கம்பனடிப்பொடியார்

"அகரமொழிக்கோர் அன்னாய் போற்றி!
பகரும் மொழிகளுள் பழையாய் போற்றி!"

என்று கூறி தமிழ்த்தாயைப் போற்றத் துவங்குகிறார்.

தமிழ்மொழிதான் பண்டு தொட்டு இலக்கியப் பொலிவுடனும், இலக்கணச் செறிவுடனும் அமைந்த மொழியே தமிழ்மொழி என்பதை 89, 90வது வரிகளில்,

"இலக்கியச் செறிவில் இணையிலி போற்றி!
இலக்கணப் பெருவளம் இயைந்தாய் போற்றி"

என்று சுட்டிக் காட்டிச் சிறப்பிக்கிறார். எதுகை மோனைச் சிறப்புடன் தமிழ்த்தாய்க்கு 108 போற்றிகள் அமைத்த

கம்பனடிப் பொடியார் நிறைவாக நாலடி வெண்பாவால்'' வம்பார் மலர் தூவி வாழ்த்தி வணங்குதுமே'' என்று மங்கல வாழ்த்துப்பாடி முடிப்பதைக் காணுகின்றோம்.

***

## 4. தமிழ்த்தாய் திருப்பள்ளி எழுச்சி

அதிகாலையில் துயிலெழுந்து நீராடிப் பாடுகின்ற ''தமிழ்த்தாய் திருப்பள்ளி எழுச்சி'' எண்சீர் விருத்தத்தில் பத்துப் பாடல்களைக் கொண்டதாகும்.

தமிழ்த்தாய் ஆலயத்தில் எழுந்தருளியுள்ள, தமிழ்த் தாயின் அருளினை வேண்டி, பனிவிழும் கதிர் நேரத்தில் பறவைகள், பசுக்கள், கன்றுகள், முனிவர்கள், புலவர்கள், பெண்கள் யாவரும் அங்குவந்து, கூடி வணங்கி நிற்கின்றனர். யாவர்க்கும் அருள்புரிய வேண்டித் தமிழ்த் தாயைத் துதிக்கின்றனர்.

''எண்ணிலர் நின்னருள் எய்த வந்துள்ளார்
எழில்மிகு கதிரில் இனிதெழும் அமுதத்
தென்னில வெனமுகம் திகழ்தரும் அன்னாய்
செந்தமிழ்த்தாய் பள்ளி எழுந்தருளாயே!''

தமிழ்த்தாய் குளிர்ந்த நிலவினைப் போன்ற முகம் உடையவள். அவளுடைய அருளினை வேண்டி யாவரும் வந்து துதிக்கின்றனர். தமிழ்த்தாயே எழுந்துவந்து எங்களுக்கு அருள்புரிவாயாக என்று அவளுடைய அருளினை வேண்டி யாவரும் துதிக்கக் காணுகின்றோம்.

தமிழ்த்தாய்க் கோவிலின்முன் அவள் அருளினை வேண்டி, யார் யார் நிற்கின்றனர் என்று கூறவந்த கம்பனடிப் பொடியார், நான்காவது பாடலில்,

''அகத்தியன் காப்பியன் அருகு நிற்கின்றார்,
அறந்தரு வள்ளுவன் அருள்நிறை இளங்கோ

மகத்தெனும் காப்பியம் வடித்தருள் கம்பன்
வளருநின் கோவிலின் மருங்கு இருக்கின்றனர்,
தொகைத் தமிழ்ப் புலவர்கள் துறை திணை பாடிச்
சூழ்ந்துநின் திருவருள் தோய்ந்து நிற்கின்றார்
செகத்தொரு நிகரிலை எனத் திகழ் அன்னாய்
செந்தமிழ்க் தாய்ப்பள்ளி எழுந்தருளாயே''

என்று கூறுகிறார்.

அகத்தியன் - அகத்தியமுனிவர்

காப்பியன் - தொல்காப்பியர்

இங்கு தொகைத் தமிழ் புலவர்கள் என்று பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினென்கீழ்கணக்கு பாடிய அத்தனை புலவர்களும் என்பது பொருளாகும். வாய்ந்த பண்டைத் தமிழ்ப்புலவர்கள் எல்லாம் தமிழ்தாயின் அருளைப்பெற ஆலயத்தின் முன்வந்து நிற்கின்றனர் என்று கம்பனடிப் பொடியார் கூறுவது வியக்கத்தக்கதாய் உள்ளது.

ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் ''செந்தமிழ்த்தாய்ப் பள்ளி எழுந்தருளாயே!'' என்று கூறி தமிழ்த்தாயைப் போற்றுகிறார் கம்பனடிப் பொடியார்.

தமிழ்த்தாய் முன்அருளை வேண்டி அவள்முன் படைத்த பொருள்களைக் கூறவந்த கம்பனடிப் பொடியார்.

''முப்பழம் பால்நறும் தேன் இளநீரும்
முதிரைகள் சர்க்கரை முதலிய யாவும்
திப்பிய முறையில் நின்திருமுனம் படைத்தோம்''

என்று குறிப்பிடுவதைக் காணுகின்றோம். அனைவருக்கும் தமிழ்த்தாய் அருள்புரிவாளாக என்று கம்பனடிப் பொடியார் வேண்டுகிறார்.

***

# 5. அடியெனை அடிமைக்கொள் அது எதுவோ?

கம்பனடிப் பொடியார் அறுசீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தில் தன் அனுபவத்தில் ஒப்புமையுடைய பல பொருட்களைக் கூறி, அவைகளில் தன்னை அடிமை கொண்டு தன்னை உயர்வடையச் செய்தவை எவை? என்று கேட்கிற வகையில், பத்துப் பாடல்களை அமைத்து நம்மை ஆழ்ந்து சிந்திக்க வைக்கிறார். மாணிக்கவாசகர் ''அதுபோக சுத்தியில்'' அறுசீர்க்கழி நெடியில் பத்துப் பாடல்களை அமைத்துள்ளார். அதேபோல மூன்றாம் சீரும் ஆறாம் சீரும் காய்ச்சீர் விரவி வரும் முறையில் அறுசீர்க்கழி நெடிலடி அமைத்து பத்துப் பாடல்களை உருவாக்கிச் சிறப்புப் பெறுகிறார் கம்பனடிப் பொடியார்.

இரண்டாவது பாடலில் கம்பருடைய கரம், நகம், வயிறு, இடை, தொடை, கழற்கால் அனைத்தின் சிறப்புக் களையும் கூறி, இறுதியில் அனைகளைத்தும் தன்னைக் கவர்ந்தன என்று கூறும் வகையில்,

சதுரநல் வடிவமை குடங்கையதோ?
சவிநிறை மணியன உதிரவையோ?
துதிபெறும் அரசிலைபொரு வயிறோ?
துகளுறும் உடைதிகழ் இடைகதுவோ?

என்று கையின் சிறப்பு, நகத்தின் சிறப்பு, வயிற்றின் சிறப்பு, இடையின் சிறப்பு என்று கம்பர் உடலுறுப்புக் களின் பெருமையை - கம்பனடிப் பொடியார் அடுக்கிக் கொண்டே செல்வதைக் காணுகின்றோம்.

ஆட்சிமுறையில் அரசனுக்கு பெரும் உதவி புரிபவை என்று ஆறு திறமைகளை கூறிக் கடைசி அடியில்

''அறுவகை அரசியல் அறிபுலவ
அடியெனை அடிமைக்கொள் அது எதுவோ?''

என்று அனைத்துமே தன்னை ஆட்கொள்பவை என்று குறிப்பாக உணர்த்துக்காணுகின்றோம்.

இவ்வாறு• ஒவ்வொரு பாடலிலும் தன் அனுபவத்தில் கண்ட பல பொருட்களைக் கூறி இறுதியில் அனைத்துமே தன்னை வயப்படுத்துவன என்பதை குறிப்பால் உணர்த்து கிறார் கம்பனடிப் பொடியார். அடிபணியவைக்கும் பத்துப் பாட்சுவை ததும்பப் பத்து பாடல்களைப் பாடி, நமக்கு சுவைக்கக் கொடுத்திருப்பது இனிமையிலும் இனிமையாகும்.

***

## 6. கம்பன் எம்மான்

கம்பன் சங்கத்தமிழ் நூல்களைக் கற்றுத் தேர்ந்தவன். தான் தோன்றிய காலத்திற்கு முற்பட்ட நூல்களையும் அறிந்தவன். மும்மூர்த்திக் கடவுளர்களின் சக்தி ஆற்றலையும் அறிந்தவன்.

கன்னித் தமிழையும் ஆரியத்தையும் நன்கு கற்றுத் தேர்ந்தவன். அம்மொழி வளத்தையும், கலை வளத்தையும் ஆய்ந்து தெரிந்தவன். தமிழ்த் தாயின் பெருமைகளை அறிந்து உணர்ந்தவன்.

எண்ணும் எழுத்தும் இலக்கணமுடன் கற்றவன் பரத கலைகள், சாத்திரங்களில் தோய்ந்தவன். ஐம்பூத தத்துவம், வேதியலை கற்றுத் தேர்ந்தவன்.

கம்பனுடைய பெருமைகளை ''கம்பன் எம்மான்'' தலைப்பில் அறுசீர்கள் கொண்ட ஏழு பாடல்களில் சுவைக்கத் தந்திருக்கிறார் கம்பனடிப் பொடியார்.

கம்பனுடைய உயர்ந்த ஆய்ந்தறியும் பண்பை ஆறாவது பாடலில் கூறவந்த கம்பனடிபொடியார்

''நல்ல பொருளைத் தான் அறிவான்
நாடும் முறையை நன்கறிவான்
தொல்லை அறங்கள் நுனித்தறிவான்
தூய அன்பைக் கணித்தறிவான்
வெல்லத் தமிழன் வீறுஅறிவான்
விளம்பும் அமைதி மிக அறிவான்
எல்லை இல்லாப் புலமை நலம்
இசைந்த கம்பன் எம்மானே!''

என்று கூறி கம்பனுடைய எல்லையில்லா நுட்ப அறிவைப் புலப்படுத்துகிறார்.

ஏழாவது இறுதிப்பாடலில்,

''கம்பன் உரை புனித வழியே மேற்கொள்வோம்''

என்று கூறி கம்பன் வழியில் நம்மை அழைத்து செல்லக் காணுகின்றோம்.

***

## 7. ஏதேனும் ஆகேனோ?

கம்பன் பயன்படுத்திய ஏதேனும் ஒரு பொருளாகத்தான் ஆக வேண்டுமென்று கம்பனடிப் பொடியார் விரும்பு கிறார். நம்மையும் விரும்ப வைக்கிறார்.

இக்கவித் தொகுப்பில் இருபது பாடல்களை இணைத்துள்ளார் கம்பனடிப்பொடியார் இருபது பாடல் களும் நான்கு காய்ச்சீர் அடிகள், நான்கு கொண்டதாய் மிளிர்வதைக் காணுகின்றோம்.

முதற்பாடலில்

''திடமுடைய கலைகளெனும் செழுநதிகள் புகமண்டும்
கடலெனவே திகழ்வானை, கம்பனெனும்
பெரியானை''

என்று கூறி, அப்படிப்பட்ட கலை ஆற்றல் மிக்க கம்பனை உடல்படிய நிலத்தில் விழுந்து வணங்கும் பேற்றை யான் பெற வேண்டும் என்று வேண்டுகிறார் - கம்பனடிப் பொடியார்.

எம்மான் என்பதற்கு எம்முடைய தலைவன் என்பது பொருளாகும் கம்பன் பயன்படுத்தும் பனை எடு, அவன் எழுதப் பயன்படுத்தும் எழுத்தாணி, அமர்ந்திருக்கும் பீடம், உணவருந்தப் பயன்படுத்தும் பொன்வட்டில், கம்பன் பால் அருந்தும் பொற்குவளை, கம்பன் உடுத்திய ஆடை, ஆடையின் எழில் உத்தரியம், கழுத்தில் அணியும் கடைமணி, கம்பன் பயன்படுத்தும் குடை, கம்பன் தூங்கும் மெத்தை, கம்பன் ஏற்ற அடைப்பை, கம்பன் பயன்படுத்தும் பாக்குவெட்டி, கம்பன் வாயில்போடும் வெற்றிலை, வெற்றிலை போடுவதற்குப் பயன்படுத்தும் சுண்ணாம்பு, கம்பன் ஏறி வந்த வண்டி, அதை இழுக்கும் மாடு, கம்பன் நடந்து வந்த பாதையிலுள்ள கருங்கல், கம்பன் பயன்படுத்திய மிதியடி, கம்பன் வீட்டின் முற்றத்தை பெருக்கப் பயன்படும் திருவலகு, கம்பன் அமர்ந்த தமிழ் சன்னதியில் உள்ள ஏதேனும் ஒரு பொருள் - இப்படிப் பத்தொன்பது பொருளில் ஒன்றாகத்தான் கம்பனுக்கு உதவ வேண்டுமென்று கம்பனடிப்பொடியார் பிறவி எடுக்க விரும்புகிறார் என்னே! மானிடப்பிறவி?

***

## 8. கம்பன் யார்?

கம்பன் யார்? என்ற கேள்விக்கு விடையாக 10 பாக்களைத் தொடுத்துள்ளார் கம்பனடிப்பொடியார். ஆறு சீர்களில் அபிநயம் ததும்ப இனிய சந்தப்பாக்களாக அனைத்தையும் அமைத்துள்ளார்.

உள்ளத்தின் ஒளியைக் கூட்டி, உணர்வினின் தெளிவை ஊட்டி, கள்ளத்தை இல்லாது ஒட்டி, தனது கடமையைப் பீடுறக் காட்டியுள்ளார், கம்பனடிப்பொடியார். வள்ளுவர் வழியில் நின்று, பள்ளத்தில் கிடப்போர்க்கு உயர்ந்தோங்கும் வாழ்வைக் காட்ட, அறத்தோடு அன்பு வெள்ளத்தை அவர்கள் உள்ளத்தில் பாய்ச்சும் விபுதனே கம்பனாவான் என்று முதல் பாடலிலே - தேன் சொட்டச் சொட்ட கருத்தமுதை சுவைக்கத் தருகிறார் கம்பனடிப் பொடியார்.

கம்பனின் மா திறத்தைக் கூறவந்த கம்பனடிப் பொடியார் - ஆறாவது பாடலில்,

''அகத்தியம் முதல வான அருந்தமிழ் நூல்களோடு
தொகைப் படு பாடல் துரிசற ஆய்ந்து மற்றும்
மிகப்பெருங் கலைகளாக விளங்கிசை, பரதம்,
சிற்பம்
வகைபல தெரிந்தோன் அன்றோ மாக்கவி கம்பன்
என்பான்''

என்று பண்டைய நூல்களோடு பரதம், சிற்பக் கலைகளை எல்லாம் கற்றுத் தேர்ந்தவன் கம்பன் என்பதை அடுக்கு மொழியோடு எடுத்துக் கூறுகிறார் கம்பனடிப் பொடியார்.

பாடல்கள் தோறும் உயர்ந்த கருத்துக்களைக் கூறுவதோடு, கம்பனை, சூரிய ஞானி, கோக்கவி, புண்ணியப் புலவன், அருங்கவிக் கம்பன், செம்புலக் கம்பன், மதிக்கவி கம்பன், எம்பிரான் கம்பன், ஓவியப் புலவன், ஓங்கறக் கம்பன், உத்தமப் புலவன், உலகெலாம் அளந்த கம்பன் என்று உச்சிமேல் புகழ்க் கம்பனை உவமையோடு உயர்த்திக் கூறுகிறார் கம்பனடிப் பொடியார். தானும் ஆற்றலில் வல்லவர் என்பதை பாவின் திறத்தால் நமக்கு எடுத்துக் காட்டுகிறார். என்னே! அவர்புலமை.

***

# 9. கம்பன் அருட்கவி ஐந்து - பஞ்ச ரத்னக் கீர்த்தனைகள்

நாட்டிய நாடகத்திற்கு-தலைசிறந்த பாடல்களைக் கொண்டது கம்பராமாயணமாகும். கம்பராமாயணப் பாடல்களுக்கு பண்களை அமைத்து இசையோடு பாடவழி வகுத்துக் கொடுத்தவர் கம்பனடிப் பொடியார் அமரர் சா. கணேசன் ஆவார்.

அமரர் சா. கணேசன் அவர்கள் தன் நண்பரான இசைப் பேரறிஞர், பேராசிரியர். டாக்டர் எஸ். இராமநாதன் அவர்களின் துணையோடு பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட பாடல்களுக்கு இசையமைத்து பாடிக்காட்டிய இசைப் பேரறிஞராகத் திகழ்ந்தவர் என்பதை அவர் வரலாற்றின் மூலம் அறிகிறோம்.

இசையமைத்துப் பாடுவதில் வல்லவரான தியாகராஜ சுவாமிகள் நாட்டை, அரபி, கௌளை, வராளி, ஸ்ரீராகம் என்ற ஐந்து கனராகங்களில் இயற்றிய பாடல்கள், உலகளாவிய பெருமையையும் புகழையும் அவருக்கு ஈட்டித் தந்தன. அவருடைய சாகித்தியங்கள், தெற்கத்திய இசைக்கலைக்கு பேருதவியாக ஒளிர்கின்றன.

தியாகராஜரின் பாடல்களில் காணப்பெறும் கவித்துவம், மேதாவிலாசம், ஸ்வர விஸ்தாரம், கருத்து வீச்சு, இசைப் புலமையாவற்றிற்கும் ஈடும் எடுப்புமாகக் கம்பனுடைய பாடல்களும் திகழ்கின்றதை அனுபவித்து அறிந்தவர் கம்பனடிப்பொடியார் ஆவார்.

நாட்டை, ஆரபி, கௌளை, வராளி, ஸ்ரீராகம் என்ற ஐந்து கனராகங்களிலும் அதற்குப் பொருத்தமான ஆதி தாளத்திலும் அமைந்த தியாகராஜரின் கீர்த்தனங்கள், அவருடைய சமாதிமுன் பகுள பஞ்சமி உற்சவத்தின் போது ஆண்டுதோறும் பாடி ஆராதிக்கப்பெற்று வருகிறது.

அதேபோல நாட்டை, ஆரபி, கௌளை, வராளி, ஸ்ரீராகம் என்ற ஐந்து ராகங்களிலும் அதற்குப் பொருத்தமான ஆதி தாளத்திலும் அமைந்த கம்பராமாயணப் பாடல்கள் ஐந்தினைக் கம்பனடிப் பொடியார் தேர்ந்தெடுத்து நாட்டரசன் கோட்டையிலுள்ள கம்பன் சமாதிமுன் பங்குனி அத்த திருநாளில் குழுவினரோடு பாடி அரங்கேற்றம் செய்ததோடு, ஒவ்வொரு ஆண்டும் அந்த நாளில், கம்பன் அருட்கவி ஐந்தும் இசைக்கப்பெற்று வருவதை நாம் அறிகிறோம்.

பஞ்சரத்னக் கீர்த்தனைகள் என்று வழங்கப்படும் அருட்கவி ஐந்தும் கம்பனடிப் பொடியாரால் ஆதி தாளத்தில் இசையமைத்துப் பாடப்பெற்று பெரும்புகழை அவருக்கு நல்குகின்றதை உலகம் அறியும்.

கம்பன் அருட்கவி ஐந்தும் கம்பனடிப்பொடியாரால் இசைத்து, ஆதி தாளத்தில் பாடப்பெற்று போற்றப்பெற்று வருபவவை ஆகும். ஐந்து பாடல்களில் ஒன்றைப் பார்ப்போம். இராமன் முடி சூட்டும் விழாவைக் கொண்டாடும் போது நகர மக்களின் நிலையை எடுத்துக் கூறும் வகையில் வராளி ராகத்தில் ஆதி தாளத்தில் அமைந்த பாடல் கீழ்க்கண்ட பாடலாகும்.

வங்கியம் பல தேன் விளம்பின, வாணிமுந்தின
பாணியின்
பங்கி அம்பரம் எங்கும் விம்மின, பம்பை பம்பின;
பல்வகைப்
பொங்கு இயம்பலவும் கறங்கின, நூபுரங்கள்
புலம்ப, வெண்
சங்கு இயம்பின, கொம்பு அலம்பின, சாமகீதம்
நிரந்தவே.
(ப. 264/பா 64)

கம்பன் அருட்கவி ஐந்தில் ஒன்றான "வங்கியம் பலதேன் விளம்பின'' என்ற பாடலில் சிறப்பை அறிந்தோம்.

இப்பொழுது ஆதி தாளத்தில் அமைந்த மற்ற நான்கு பாடல்கள் பின்வருமாறு.

1. பாலகாண்டம் கடவுள் வாழ்த்து (நாட்டை - ராகம்)

உலகம் யாவையும் தாம் உள வாக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும், நீங்கலா,
அலகிலா விளையாட்டு உடையார், அவர்
தலைவர், அன்னவர்க்கே சரண் நாங்களே:

2. கருடன் துதி (ஆரபி - ராகம்)

வாணாள், அளித்தி முடியாமல், நீதி
வழுவாமல் நிற்றி - மறையோய்!
பேணாய், உனக்கு ஓர் பொருள்
வேண்டும் என்று, பெறுவான் அருத்திபிழையாய்;
ஊன் ஆய், உயிர்க்கும் உயிர்ஆகி நிற்றி,
உணர்வு ஆய பெண்ணின் உருஆய்,
ஆண்ஆகி, மற்றும் அலி ஆகி - ஆர்இவ்
அதிரேக மாயை அறிவார்?

3. விரோதன் துதி (கௌளை ராகம்)

வேதங்கள் அறைகின்ற உலகு எங்கும் விரிந்தன உன்
பாதங்கள் இவை என்னின், படிவங்கள்
எப்படியோ?
ஓதம் கொள் கடல் அன்றி, ஒனறினோடு ஒன்று ஒவ்வாப்
பூதங்கள் தொறும் உறைந்தால் அவை
உன்னைப் பொறுக்குமோ?

4. தேவர்கள் துதி (ஸ்ரீரங்கம்)

உன்னை உள்ளபடி அறியோம்; உலகை உள்ள
திறம் உள்ளோம்,
பின்னை அறியோம்; முன் அறியோம்; இடையும்

அறியோம், பிறழாமல்
நின்னை வணங்கி, நீ வகுத்த நெறியில் நிற்கும் இது
அல்லால்,
என்னை அடியோம் செயல்பால இன்ப துன்பம்
இல்லோனே.

மேற்கொண்ட பஞ்சரத்ன கீர்த்தனைகளை நாட்டரசன் கோட்டை கம்பர் சமாதி வழிபாட்டின் போது ஆண்டு தோறும் இசைக்கப்பெற்று வருவதை அறிகிறோம். இந்த ஏற்பாட்டைச் செய்த கம்பனடிப் பொடியாரின் தொண்டினைப் போற்றுவோமாக.

***

## 10. நன்றியொடு பல்லாண்டு

நன்றியோடு பல்லாண்டு என்ற தலைப்பிலே, கம்பனடிப் பொடியார் அறுசீர்க்கழி நெடிலடியில் ஏழு பாடல்களைத் தந்திருக்கிறார். அந்தாதி அமைப்பிலே அப்பாடல்களை கோர்த்து சுவைக்கத் தந்துள்ளார்.

''யாதும் ஊரே'' யாவரும் கேளிர்'' என்ற கணியன் பூங்குன்றனாரின் பாடல் கருத்தினை இணைத்து, ஒவ்வொரு மனிதனும் மனம், வாக்கு, செயல்களிலே தூய்மையைக் கடைபிடித்தால், இந்த வையம் சிறக்குமென்று முதல் பாடலிலே எடுத்துரைக்கிறார்.

அன்பு-அறத்தை மேற்கொண்டு, தன்னலத்தை விட்டொழித்து, பொறாமையை மேற் கொள்ளாமல் இறைப்பற்றுடன் வாழ்வதே மனிதனுக்கு இன்பம் பயக்கும் என்பதை இரண்டாவது பாடலில் கம்பனடிப் பொடியார் வலியுறுத்தக் காணுகின்றோம்.

இறைவன் ஒருவனே என்பதை அனைத்து சமயங்களும் தத்தம் வழியில் எடுத்துக் கூறுகின்றன.

பயன் கருதாமல், செயல்களைச் செய்ய வேண்டும். மண்ணுலகத்தில் பிறந்த நமக்கு பேரின்பம் நல்கக் கூடியது, இறைத் தொண்டும் பயன் கருதாச் செயலும் என்பதை கம்பனடிப் பொடியார் மூன்றாவது பாடலிலே தெளிவுறுத்தக் காணுகின்றோம்.

நல்ல வழிகளில் பொருள்களைத் தேடிப் பெற வேண்டும். எளியவர்க்கு உதவி செய்ய வேண்டும். ஆடம்பர வாழ்வு இன்றி, எளிய வாழ்க்கை நடத்த வேண்டும். அதுவே மகிழ்வோடு நாம் வாழ வழி காட்டும் என்று நான்காம் பாடலிலே கம்பனடிப் பொடியார் கருத்து மழை பெய்யக் காண்கின்றோம்.

எப்படியும் வாழலாம் என்று மனிதன் கருதாமல் இப்படித்தான் வாழ வேண்டும் என்ற கருத்தை மனிதனுக்கு ஐந்தாம் பாடலிலேயே கம்பனடிப் பொடியார் புகட்டக் காணுகின்றோம். போது மென்ற மனமே பொன்செய்யும். தமக்கு கிடைத்த பொருளைக் கொண்டு எளிமையாக வாழ்வதே மனிதனின் எண்ணமாக இருக்க வேண்டும் என்பதை ஐந்தாவது பாடலிலே கம்பனடிப் பொடியார் நமக்கு எடுத்துரைக்கக் காணுகின்றோம்.

ஆறாவது பாடலிலே,

''உண்மையே கடவுள் எனும் உயர்காந்தி
மகான்மொழி உளத்திற் பள்ளி
திண்மை நிறை அன்பு நெறி சிக்கெனவே
கடைப்பிடித்து சிந்தை யாலும்
நுண்மைதரு பொருளெதையும் நுகராமல்
ஒதுக்குவோ மேல் நோயே இன்றி
வண்மை நிறை மனநலனும், மதிநலனும்
உடல் நலனும் வளரும் கண்டீர்!''

என்று கூறி மனமும், உடலும் திடம்பெற இறைபக்தி வேண்டும் என்று கம்பனடிப்பொடியார் குறிப்பிடுகிறார்.

ஏழாவது பாடலில் ஐம்புலன் அடக்கம் மனிதனுக்கு வேண்டும். அதுவே மண்ணுலகில் கீர்த்தியுடன் வாழவும் வீடுபேறு பெறுவதற்கு உரிய வழியுமாகும் என்று அற நூல்கள் குறிப்பிடுவதை கம்பனடிப் பொடியார் வலியுறுத்திக் கூறுகிறார். பல்லாண்டு பாடிய கம்பனடிப்பொடியார் என்றும் வாழ்கிறார்.

***

## 11. கம்பன் கல்வியில் பெரியவன்?

கம்பன் கல்லாத, கற்றியாத, விஞ்ஞான, மெய்ஞ் ஞானக் கலை எதுவுமே இல்லை எனலாம். சுக்கிரீவன் அமைச்சனாகிய அனுமனை ஆற்றலும் கல்வித்திறனும், வேற்றுமை பாராட்டாத சமரசமுடையவனாகப் படைத்துள்ளார். கேள்வி நூல் மறைவல்லவனாக வெளிப்படுத்தியுள்ளார். இராமபிரானால் சொல்லின் செல்வன் என்ற பட்டத்தையும் கொடுக்கச் செய்தார். இப்படிப்பட்ட கம்பனை, வேதநூல் கற்ற வித்தகனை வெளியுலகத்துக்குக் காட்டியவர் கம்பனடிப் பொடியாரே ஆவார்.

மிதிலைக் கன்னிமாடத்தில் நின்ற சீதையின் கண்களும், அவளைக் கண்ட இராமனுடைய கண்களும் ஒன்றிப் பார்த்த நிலையில் இருவருடைய உள்ளத்தையும் கொள்ளை கொள்ளச் செய்த கம்பன் திறத்தை வெளிக் கொண்டு வந்தவர் கம்பனடிப் பொடியார் ஆவார்.

மிதிலை மன்னனால் உபசரிக்கப் பெற்ற இராமனும், இலக்குவனும், விசுவாமித்திர முனிவரும் அரண்மனை அறையில் இரவில் தங்குகிறார்கள். விசுவாமித்திரரும், இலக்குவனும் ஒரு புறத்தில் உறங்கிக் கொண்டிருந்தனர். இராமன் தனியாக ஒரு திறந்த மாடத்தில் படுக்கையில் படுத்திருக்கிறான். சீதையை எண்ணிய இராமனுக்குத்

தூக்கம் வரவில்லை. படுத்துக் கொண்டிருந்த அவனுக்கு துணையாய் இருந்தன ஐந்து பொருள்கள் என்று கம்பர் வர்ணிக்கிறார். அவை இரவு, முழுமதி, தனிமை, தன்னை மறவாத் தன்மை, கன்னிமாடத்தில் கண்ட பெண்ணின் உருவம் ஆகும். தான் என்னும் தன்னை மறவாத் தன்மை என்பது சீதையைப் பற்றி மனக்கண் முன் கொண்டு வரும் விரக தாபத்தைக்குறிக்கிறது. இதனைக் கம்பர் குறிக்கிறார். அந்த நிலையில் கம்பர் எடுத்தியம்பும் நுட்பத்தை வெளியோர் உணர விளக்கிக்காட்டியவர் கம்பனடிப் பொடியார் அமரர். சா. கணேசனே ஆவார்.

பூத-பௌதிகக் துறையிலே கம்பனின் அறிவாற்றல் ஓங்கி நிற்கக் காணுகின்றோம். நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகிய ஐந்தும் ஐம்பூதங்கள் என்கிறோம். அந்த ஐந்தும் உலகம் என்ற ஒரு மூலகத்தையே அடிப்படை யாகக் கொண்டவையாகும் என்பதைக் கம்பர்.

> "பூதம் ஐந்தும் விலங்கிய விகாரப்
> பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம்"

என்கிறார். ஒரே மூலகம் எண்ணற்ற வகையாக மாறுகின்ற அற்புதத்தை கம்பர் கூறுவதை விளக்கி எடுத்துரைக்கிறார் கம்பனடிப் பொடியார்.

அணுவைப் பற்றிய அறிவாற்றலையும் இறைவன் எங்குமுளான் என்ற நுட்பத்தையும் கம்பர், பிரகலாதன் வரலாற்றுப்பாடலில்,

> "சொல்லடா, அரி எங்கே என்று
> உறுமுகிற இரணியனுக்கு
> சாணினும் உளம், ஓர் தன்மை
> அறுவினைச் சத கூறு இட்ட

கோணினும் உளன்; மா மேருக்
குன்றினும் உளன்; இந்நின்ற
தூணினும் உளன்; நீ சொன்ன
சொல்லினும் உளன்''

என்று கம்பன் பாடுவதைக் கேட்டு நாம் வியப்பில் மூழ்குகின்றோம். இதனை விளக்கி எடுத்துரைக்கிறார் கம்பனடிப் பொடியார்.

அணுவையும் நூறு பாகமாகக் கூறு செய்யலாம். ஒரு ரூபாயை நூறு பைசாக்களாக மாற்றுதலைப் போல, அணுவையும் நூறு சமக்கூறுகளாக ஆக்கலாம். அணுவின் அந்த நூற்றில் ஒரு பகுதிக்குக் ''கோன்'' என்று பெயர். இதனைத் தான் மேற்கண்ட பாட்டில்,

''ஓர் தன்மை அறுவினைச்
சத கூறு இட்ட கோணினும் உளன்''

என்று கம்பனடிப் பொடியார் விளக்கிக் காட்டக் காணு கின்றோம். என்னே! கம்பனடிப்பொடியாரின் ஆய்வுத் தன்மை.

கம்பன் வானியல் பற்றிய விரிந்த ஞானம் பெற்றவர் என்பதை கம்பனடிப் பொடியார் விளக்கிக் கூறக் கேட்கிறோம். வானத்தில் மீன், கோள், ஞாயிறு, திங்கள், வால்மீன், நாள் என்பன ஒளிரக் காணுகின்றோம். சூரியன் எப்பொழுதும் பூமத்திய ரேகையில் செல்வதில்லை. ஆறுமாதம் தெற்கிலும், ஆறுமாதம் வடக்கிலும் சார்ந்தே சஞ்சரிப்பான். தெற்கே சார்ந்து சஞ்சரிக்கும் போது அதன் காலத்தை தெட்சணாயணம் என்கிறோம். ஆடி முதல் மார்கழி வரை உள்ள ஆறு மாதங்கள் தெட்சணாயனம் ஆகும். சூரியன் வடக்கே சார்ந்து சஞ்சரிக்கும் போது அதன் காலத்தை உத்தராயணம் என்கிறோம். தை முதல் ஆனி வரை உள்ள ஆறுமாதங்கள் உத்ரராயணம் ஆகும். இந்த

அறிவாற்றல் கம்பன் அறிந்த பேராற்றலாகும். இதை எடுத்துக் கூறுபவர் கம்பனடிப் பொடியார் ஆவார்.

வானியல் ஆற்றலுடன் நிலவியல் ஆற்றலும் கொண்டவர் கம்பராவார். நிலவியலிலுள்ள இலங்கை, கடலின் நடுவே உள்ள விரிநகரமாகும். அது பூமத்திய ரேகையை ஒட்டி உள்ளது. எனவே அதன் நேர் உச்சியில் சூரியன் சஞ்சரிப்பதில்லை. இதனை அறிந்த கம்பன் தன் பாத்திரமாகிய இராவணனையும் அறியச் செய்து அதற் கேற்ப இலங்கை மாநகரையும் அமைக்கச் செய்கிறான். இதனால் இராவணனுக்கு அஞ்சி, அவனுடை ஆணைக்குக் கட்டுப்பட்டு சூரியனும் இலங்கையை நேர் உச்சியில் தாண்டிச் செல்ல மாட்டானாம் இத்தகைய அறிவாற்றலுடன் இராவணன் இலங்கையை அமைத்தவன் ஆவான்.

இதனால்தான் இராமனின் தூதனாக இலங்கை சென்ற அங்கதன், வான்முகட்டைத் தொட்டுக் கொண்டிருக்கும் இலங்கையின் உச்சிப்பக்கம் செல்லாமல், ஒருபுறம் சாய்ந்தே சென்று இராவணன் முன் குதிக்கின்ற காட்சியைக் காணுகின்றோம்.

கம்பனின் அறிவாற்றலால் இராவணன் இலங்கை மாநகரைப் பீடுறக் கட்டியிருந்தான். என்னும் அத்திறத்தை அறியச் செய்த அங்கதன் பாத்திரத்தையும் படைத்தவன் கம்பனே ஆவான். இதை எடுத்து வாசகர்க்கு அறியச் செய்தவன் கம்பனடிப் பொடியார் ஆவார். என்னே! கம்பனின் புத்தி நுட்பம்! என்னே! கம்பனடிப் பொடியாரின் அறியும் நுட்பம்!

இப்படிப் பல சம்பவங்களால் கம்பனை கல்வியியல் பெரியவனாகக் காட்டுகிறார் கம்பனடிப் பொடியார். அவரை நாம் போற்றுவோமாக.

❋❋❋

## 12. உலகில் ஒரு கவி

தமிழ்மொழி உலகில் ஒளிரும் எம்மொழிக்கும் குறைந்த தில்லை. தாலாட்டு முதல் ஒப்பாரி வரை அனைத்தையும் கவிதையாக - இலக்கியமாகப் படைத்துப் பெருமை அடைபவர்கள் தமிழ்மக்கள்.

தமிழ் இலக்கியச் சோலையில் அறம், பொருள், இன்பம், நீதி, தத்துவம் சமயம், மருத்துவம், சோதிடம், கட்டிடம், சிற்பம் மற்றும் செடி, கொடி, மரங்கள் பூத்துக் குலங்கக் காணுகின்றோம். அச்சோலைக்கு வேலியாக மாதவி மலர்க்கொடி பொலிவுடன் படர்ந்திருப்பதைக் காணுகின்றோம். அச்சோலைக்குள் நுழைந்துவிட்டால் பலப்பல கதைகள், வரலாறு, இலக்கியங்கள், சிறு காப்பியம், பெருங்காப்பியங்களாகிய தாவரங்கள் செழித்து வளர்வதைக் காணுகின்றோம். அத்தகைய பெருமைமிக்க சோலையின் மத்தியில் வளமுடன் காட்சியளிக்கும் மரம் தான் இராமாவதாரமாகும். இம்மரத்தில் அன்பெனும் மொட்டு அரும்பி தருமமெனும் மலர் மலர்ந்து, போகக் கனிகள் பழுக்கக் காண்கிறோம். அம்மரத்தை உருவாக்கிய பாட்டாளி தான் கவிச்சக்கரவர்த்தி கம்பராவான். கம்பன் உருவாக்கிய இராமாவதாரம் இன்று கம்பராமாயணம் என்ற பெயரோடு பெருங்காப்பியமாகத் திகழ்வதற்கு வழிவகுத்த நூல் தண்டியலங்காரமாகும்.

சங்ககாலத்திற்கு முன்னரே மூன்று இராமாயணங்கள் தமிழில் இருந்திருக்கின்றன. தொல்காப்பியம், யாப்பெருங்கலம், வீரசோழியம் இவற்றிற்கு உரை எழுதியவர்கள் ஆசிரியப்பா, வெண்பாக்களில் இச்செய்தியைத் தெரிவித்துள்ளார்கள்.

> ''வெல்போர் இராமன் அருமறைக் கவித்த
> பல் வீழ் ஆலம் போல''

என்று அகநானூற்றில் கம்பராமாயணத்துக்கு முந்தி இருந்த இராமாயணக் கருத்தைக் குறிப்பிடக் காணுகின்றோம்.

புறநானூற்றில் முந்திய இராமாயணச் செய்தியை,

''கடுந்தெறல் இராமனுடன் புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வெளவிய ஞான்றை''

என்று சுட்டிக் காட்டக் காணுகின்றோம். சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகளும் பல இடங்களில் முந்திய இராமகாதைக் கருத்துக்களைத் தெரிவிக்கிறார். சான்றாக

''தாதை ஏவலின் மாதுடன் போகி
காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்''

என்று குறிப்பிடக் காணுகின்றோம்.

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளை நோக்கும் போது வள்ளுவர் காலத்திற்குப் பிறகும், பன்னிரு ஆழ்வார் களுக்கும் பிற்பட்ட காலத்தில்தான் கம்பர் பிறந்தார் என்ற செய்தியை நாம் அறிகிறோம். கி.பி. 9ஆம் நூற்றாண்டில் அதாவது கி.பி. 871 முதல் 907 வரை சோழ நாட்டை ஆண்ட கோதண்டராமனான ஆதித்த சோழன் கம்பனிடம் பெரு மதிப்புக் கொண்டான். அக்காலமே கம்பன் காலம் என்று உறுதியிட்டு கம்பனடிப் பொடியார் குறிப்பிடக் காணுகின்றோம். மேலும் கம்பன் தனது இராமாவதாரத்தை கி.பி. 886ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 23ம் நாள் அரங்கேற்றினார், என்று கம்பனடிப் பொடியார் துணிந்து கூறக் காணுகின்றோம். அகில இந்தியாவையும் ஈழம் உட்பட ஒரு நாடாக ஆக்கும் கதையாகிய இராமாவதாரத்தை கம்பர் படைத்துள்ளார், என்பதையும் திட்டப்படுத்தி யுள்ளார் கம்பனடிப் பொடியார். வள்ளுவர் குறிப்பிடும் அறத்தையே மும்மூர்த்திகளாகக் கொண்டு இராமாவதாரத்தைப் படைத்தார், என்ற உண்மையை கம்பனடிப் பொடியார் வெளிப்படுத்தக் காண்கின்றோம்.

சிலையைச் செதுக்கும் சிற்பியானவன் தான் பயன்படுத்தும் கல்லானது, இத்தாலிக்கல் அல்லது தூர கிழக்கு நாட்டில் உள்ள கல் - என்று எண்ணாமல் கால

வெள்ளத்தைத் கடந்து உறுதியாகத் தாக்குப்பிடிக்குமா என்று எண்ணித்தேர்ந்தெடுப்பது போல, கம்பனும் தமிழக மக்கள் மட்டுமின்றி உலகோர் ஏற்கும் வகையில் கருத்துச் செறிவைப் புகுத்தியே இராமாயணத்தைப் படைத்தான் என்பதை கம்பனடிப் பொடியார் எடுத்துக் கூறக் காணுகின்றோம்.

இராமாயணத்தில் இராமன் அறப்பாத்திரம். இராவணன் மறப்பாத்திரம். இராமன் அறத்தின் மூர்த்தியாவான். இராவணன் பிறன் மனை கவர்ந்த பாவியாவான். அறம் வெல்லும். பாபம் தோற்கும் என்ற உண்மையை உணர்த்துவதுதான் இராமாயணத்தின் கட்டுக்கோப்பாகும். இராவணன் ஆணவச் செருக்கால் அறத்தை மறந்தான் - அறம் வென்றது. ஆற்றல் இழந்து பாவம் தோற்றது.

எடுத்த எடுப்பிலேயே, தான் உத்திரகாண்டம் பாடுவதில்லை என்று கம்பன் எண்ணியதை நமக்குப் தெரிவிப்பவர் கம்பனடிப் பொடியார் ஆவார்.

இராமனைப் போல வேடம் போட்ட ஒருவனை சீதை முன் நிறுத்தக் கூடாது என்று கருதியே, ஜனகர் போல வேடம் போட்ட ஒருவனை சீதை முன் நிறுத்துகிறார் கம்பர். வால்மீகியின் மனப்போக்கைவிட இந்நிகழ்ச்சியில் கம்பனுடைய உயர்ந்த மனப்போக்கை, உள்ளாந்த தத்துவத்தை கம்பனடிப் பொடியார் உலகிற்கு எடுத்துக் கூறக் காணுகின்றோம்.

கவியாற்றலோடு மக்களுக்கு வழிகாட்டும் வகையில் காவியம் படைப்பதில் வல்ல ஒரு கவிஞன் தோன்றினார் என்றால் அவர் கம்பர்தான் என்பதை பின்வரும் பாடலில் அறிகிறோம்.

"கல்லிடைப் பிறந்து போந்து
கடலிடைக் கலந்த நீத்தம்

எல்லைஇல் மறைகளாலும்
இயம்ப அரும்பொருள் ஈது என்ன
தொல்லையில் ஒன்றே ஆகி
துறைதொறும், பரந்த சூழ்ச்சி
பல்பெரும் சமயம் சொல்லும்
பொருளும் போல் பரந் ததன்றே!''

கல்லிடை - மலையிடத்து

நீத்தம் - நீர் ஆறு

பரம்பொருள் ஒருவரே ஆவார். இதனைப் பல மதங்கள் பலவாறாகப் பெயரிட்டழைக்கின்றன. இத்தத்துவத்தை விளக்க ஆற்றையும், கடலையும் நம்முன் கொண்டு வருகிறார், கவியாற்றலோடு கம்பர். கடல் விரிந்தது. அதுவே பரம்பொருள் ஆறுகள் வந்து கூடுகின்றன. மதங்கள் பலவற்றால் பரம்பொருள் போற்றப்படுகிறது. இதனை அறுசீர்களில் கவிநயத்தோடு பரம்பொருள் தத்துவத்தை விளக்கிய ஒரு கவி உலகில் யாரென்றால் அவர் கம்பர்தான்.

விருத்தக் கவிச் சிற்பி, கவிச்சக்கரவர்த்தி கம்பரைப் போற்றி,

''விருத்தம் என்னும் ஒன்பாவிற்கு உயர் கம்பன்''

என்று போற்றப்படுகிறார்.

இரு சீர்க்குறளடி, முச்சீர்ச்சிந்தடி, நாற்சீர் அளவடி, ஐஞ்சீர் நெடிலடி, அறுசீர்க் கழிநெடிலடி, எழுச்சீர் கழி நெடிலடி எண்சீர்க்கழி நெடிலடி அமைத்து காவியத்தை அமைத்துப் பெயர் பெற்ற உலகில் ஒரு கவி கம்பரே யாவார்.

அளவியல் சந்த விருத்தங்கள் சற்றேறக்குறைய 5000 விருத்தங்களை இராமாயணத்தில் அமைத்து பேர்

புகழ் பெற்றவர் கம்பர் ஆவார். இதனை எடுத்துக் கூறிய வித்தகர் கம்பனடிப்பொடியார் ஆவார்.

'பல்லவி, அனுபல்லவி, சரணம் அமைத்துப் பல காலங்களிலும் கீர்த்தி பெற்ற புலவர்களின் பாடலோடு கம்பர் கவியையும் ஒப்பிட்டு எடுத்துக்கூறியுள்ளார் கம்பனடிப் பொடியார்.

எடுத்துக்காட்டாக அடிதோறும் நான்குசீர்கள் கொண்டதாய், அவைகளில் 17 எழுத்துக்கள் அமைந்ததாய், நட்டபாடைப்பண்ணில் திருஞானசம்பந்தர் பாடிய பாடல்,

"உண்ணா முலை உமையாளொடும்
உடனாகிய ஒருவன்
பெண்ணாகிய பெருமான் மலை
திருமா மணி திகழ
மண்ணார்ந்தன அருவித்திரள்
மழலைம் முழ வதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை
வழுவாவனம் அறுமே!"

மேற்கண்ட பாடலின் சந்த நயத்தோடு, நட்டபாடைப் பண்ணில் அடிதோறும் நான்கு சீர்கள் பயின்றுவரும் வகையில் கம்பர் கீழ்க்கண்ட பாடலைப் பாடியுள்ளார்.

"என்னாஅடி விழுவானையும் இகழாளரி விழியா
பொன்வார் கலை அணிவானெதிர்
புகுவானிலைஉணரா
தன்னாலொரு செயலின்மையை நினையா உயிர்தளரா
மின்னாலாயா யுறும்வாளர வெனவெந்துயர்
உறுவான்"

ஞானசம்பந்தரின் கவியாற்றலுக்கு இளைத்தவரல்லர் கம்பர்.

இவ்வாறு பல கவிஞர்களோடு ஒப்பிட்டுக் கம்பரின் பாடல் நயத்தை விளக்கிக் காட்டிய கம்பனடிப் பொடியார், உலகில் ஒரு கவி கம்பரே என்று மேலும் பல சான்றுகள் தந்து விளக்கக் காண்கிறோம். அவர் கவியாற்றலைப் போற்றுவோமாக!

***

## 13. கம்பன் கனவு

கம்பன் கண்ட கனவாக, தம் என்ன நினைவுகளை - கம்பராமாயணத்தின் அற்புதப் படைப்பைப் பல பட எடுத்துக் கூறுகிறார் கம்பனடிப் பொடியார். கோடானு கோடி பொறியியல் நிபுணர்களைக் கொண்டும் தச்சர்களைக் கொண்டும் உருவாக்கப்படுகின்ற, பெரிய பெரிய நகரங் களும், அழகு சிற்பங்களும் அழிந்து விடக் காணுகின்றோம். ஆனால் கவிதைத் தச்சர்கள் கட்டிய மாளிகைகள் அழியாது நிலைத்து நிற்பதைக் காணுகின்றோம். அப்படிப்பட்ட கவிதை நிபுணர்களில் தலை சிறந்த நிபுணராக கம்பனைக் காணுகின்றோம். வெள்ளை மேகம் கடலில் உள்ள நீரை மண்டுகிறது. பின் கருமையான நிறத்துடன் செல்கிறது. அதற்கு ஓர் உவமை. சிவனைப்போல சென்ற மேகம், நீரை எடுத்துக்கொண்டு திருமாலைப் போலத் திரும்புகிறது.

ஆறு ஒரு பெண், கடல் ஓர் ஆண். ஆறானது கடலைச் சென்றடைவது, ஒரு பெண் தன் கணவனை அடைவது போன்றதாகும். கடலுக்கு மாமன் முறை மலையாகும். ஆற்றைத் தந்தது மலையாகும். இப்படிப்பட்ட உவமை யுடன் மலையிலிருந்து ஆறு உண்டாகிப் பின் அது கடலை யடைகிறது. இதனை உள்ளார்ந்த உவமை காட்டி. கம்பனடிப் பொடியார் விளக்குவது அற்புத ஆற்றலை வெளிப்படுத்துவதாகம்.

கோசல நாட்டின் ஊருக்குள் சென்றால், அங்குள்ள வீடுகள் சகல பொருட்களும் நிறைந்து ஒரு பண்டகசாலை போல காட்சியளிக்கிறது.

வீட்டில் வாழ்வோர் எல்லோரும் மகிழ்ச்சியாகவே இருக்கின்றனர். டவாலிச் சேவகன் நிற்கும் மண்டபம் அங்கு எங்குமில்லை. நாய்கள் ஜாக்கிரதை என்ற போர்டு எங்குமே இல்லை. சூதாட்டக் கூட்டமே அந்நகரில் எங்கும் இல்லை. கள்ளுக்கடைகளே அங்கு இல்லை. தண்டனைக் குட்பட்டவர்கள் யாரும் அங்கு இல்லை. எந்த அட்டுழி யங்களும் திருடர் பயமோ அந்நாட்டில் இல்லை. கடைகளிலோ, வீட்டிலோ கோபப்படுகிறவர் யாரும் இல்லை. பிச்சைக்காரர்கள் என்று யாருமே இல்லை. இரந்து பொருட்களை கேட்போர் யாருமில்லை. பகைவன் இவன் என்று யாரும் குறிப்பிட முடியாமல் எல்லோரும் அன்பாய் உறவாடுபவர்களையே காணுகின்றோம். வள்ளல் என்று யாரையும் குறிப்பிட முடியாதபடி எல்லோரும் செல்வம் படைத்தவர்களாகவே உள்ளனர். வீட்டிற்கு வந்தோர் எல்லாம் நன்கு உபசரிக்கப்பெற்று விருந்துன்பதையும் காண்கிறோம். வீட்டில் வேண்டிய பொருட்களையெல்லாம் எளிதாகப் பெற்றுள்ளமையால் வறுமை என்ற பேச்சுக்கே இடமின்றி மகிழ்ச்சியுடன் மக்கள் வாழ்ந்தனர். மனத்திலும், உடலிலும் பலவீனம் இடமின்றி மகிழ்ச்சியுடன் மக்கள் வாழ்ந்தனர். மனத்திலும், உடலிலும் பலவீனம் இல்லாமல் திடகாத்திர முடையவர்களாகவே மக்கள் இருந்தனர்.

அறிவற்றவர்களே இல்லாமல் யாவரும் கேள்விச் செல்வம் பெற்று வாழ்ந்துவர நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டன. யாவரும் புலமை பெற்றவர்களாகவே வாழ்ந்து வந்தனர். நாட்டைப் பார்க்க வந்த ஒரு விருந்தாளியிடம் ஒரு இல்லறத்தார் பாடுகின்றார்.

''கூற்றம் இல்லை, ஓர் குற்றம் இன்மையால்
சீற்றம் இல்லை தம் சிந்தையின் செம்மையால்

ஆற்ற நல்லறம் அல்லது இலாமையால்
ஏற்றம் அல்லது இழித்தகவு இல்லையே.

''வண்மை இல்லை ஓர் வறுமை இன்மையால்
திண்மை இல்லை நேர் செறுநர் இன்மையால்
உண்மை இல்லை பொய் வுரை இலாமையால்
வெண்மை இல்லை பல் கேள்வி மேவலால்''

என்று நாட்டில் வாழ்ந்தவர் உயர் நிலை பெற்றுத் திகழ்வதை கம்பர் கனவு கண்டதாக கம்பனடிப் பொடியார் கூறுவது அவரது ஒப்பரிய திறமாகும்.

கோசல நாட்டில் வாழும் பெண்கள் நிலை பற்றியும், வாழ்க்கை முறைபற்றியும், கம்பர் கனவு உயர்ந்து நிற்பதைக் காணுகின்றோம். மேல்நாடுகளில் பெண்களை முரட்டுத்தனமான சுரங்கத் தொழில் போன்றவற்றில் ஈடுபடச் செய்வது, ஆண்களின் ஏதேச்சதி காரத்தால் கல்வியறிவும், செல்வ உரிமையும் இன்றி உரிமையில் தாழ்ந்தவர்களாக கருதப்படுவதையும் காண்கிறோம். ஆனால் கம்பர் படைத்த பெண்களின் உயர்வைக் கண்டு நாம் மலைப்பும், திகைப்பும் அடைகிறோம்.

கோசல நாட்டில் பெண்கள் உயிர் ஓவியம் என்று சொல்லும்படி அவ்வளவு எழில் வாய்ந்தவர்களாக விளங்குவதைக்கு காணுகின்றோம். பெண்கள் கல்விச் செல்வமும் பொருட் செல்வமும் நிறைந்தவர்களாக விளங்கு கிறார்கள். ஆண்களும் பெண்களை உயர்ந்த நிலையில் மதித்துப் போற்றுகிறார்கள். வந்தவர்களுக்கு நல்ல வரவேற்பளித்து இல்லை என்று சொல்லாமல் அறம் செய்வதோடு சிறந்த விருந்துகளை அவர்களே பொறுப்புடன் ஏற்கும் பெருமையை பெற்றுள்ளனர்.

''பெருந்தடங்கண் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்,
வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்
விருந்தும் அன்றி விளைவன யாவையே?

என்று பெண்களுடைய பொழுதுபோக்கு உயர்ந்த அறத்தோடு நிற்பதைக் கம்பன் காட்டுகிறார்.

நீர்வளம், நிலவளம் பொருந்தியது கோசல நாடு, வயலும், வயல் சார்ந்த இடமும் மருதம் ஆகும். சரயு நதி பாய்வதால் அந்நாட்டில் வயல்கள் எல்லாம் செழிப்பாக இருக்கின்றன. சோலை வளம் பொருந்திய நாடு கோசல நாடு. மயில்கள் அங்கு தோகைவிரித்தாடுகின்றன. தாமரைக் கொடிகள் பெண்களாவார்கள். அவர்கள் மலர்களாகிய விளக்குகளை கையில் ஏந்தி நிற்கின்றனர். மேகம் மத்தளம் போல் ஒளிக்கின்றது. நீர் நிலைகளில் உள்ள அலைகள் திரைகளைப் போல விளங்குகின்றன. வண்டுகள் தேன் போன்ற மகர யாழின் இசையைப் பாடுகின்றன. கருங் குவளைகள் மலர்களாகிய தம் கண்களால் பார்க்கின்றன.

ஆம்! மகாராணி மருதாயி நாச்சியார் கொலு வீற்றிருக்குமிடம் எப்படியோ, அப்படியுள்ளது.

"தண்டலை மயில்கள் ஆட
தாமரை விளக்கம் தாங்க,
கொண்டல்கள் முழவின் ஏங்க,
குவளை கண் விழித்து நோக்க,
தெண்திரை எழில் காட்ட,
தேம் பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட
மருதம் வீற்றிருக்கும் மாதோ"

கம்பன் கண்ட நாடு காந்தியடிகளின் சர்வோதய நாட்டிற்கு ஒப்பிடப்படுகிறது.

கோசல நாட்டைப் போல இன்ப இல்லறம் நடத்தும் நாட்டை உண்டாக்க உறுதுணைபுரிவது கல்வியாகும். கல்வியாகிய விதையை விதைத்தால் அது நான்கு திசையிலும் கிளைகளாகப் பரவி கேள்விச் செல்வத்தை அளிக்கும். அந்தக் கிளைகளில் நல்ல

முயற்சி என்னும் தளிர்கள் தளிர்க்கும். அதில் அன்பு எனும் மொட்டுக்கள் அரும்பும். அன்பாய் அரும்பிய மொட்டு அறமாய் வளரும். அது போகக் கனியாகிய இன்பப் பழத்தைக் கொடுக்கும். அந்த போகக் கனியன் மணமே நமக்கு நல்ல அனுபவத்தைக் கொடுக்கிறது. அனைத்திற்கும் அடிப்படை கல்விதான் இதனை கம்பர்,

"ஏகம முதற்கல்வி முளைத்து
எழுந்து, என் இல் கேள்வி
ஆகமுதற் திண்பணை போக்கி
அருந்தலத்தின்
சாகம் தழைத்து அன்பு அரும்பித்
தருமம் மலர்ந்து
போகம் கனி ஒன்று பழுத்தது
போலும் அன்றே."

ஏகம் - ஒன்றே ஒன்று,

முதல் - வித்து

எண்இல் - ஏராளமான

பணை - கிளை

சாகம் - இலை

போகம் - இன்பம்

போலும் - போல இருக்கிறது.

நாட்டின் உயர்வுக்கு அடிப்படை கல்வியே என்பதை இப்பாடல் மூலம் அறிகிறோம்.

எனவே நாட்டின் சிறந்த முன்னேற்றத்திற்குக் கல்வியே என்பது கம்பர் கனவல்ல. நனவேதான், இதைப் படித்த நம்முடைய வாய், "சபாஷ் கம்பன்" என்று வாழ்த்துகிறது.

***

# 14. கம்பன் அருளிய இராமாவதாரம்

கம்பன் கவிகள் அற்புதமானவை. கம்பன் இயற்றிய இராமாவதாரத்தில் ஆறு காண்டங்களையும் விருத்தப் பாக்களால் அற்புதமாகப் படைத்துள்ளார்.

கம்பன் பல பாக்களைப் படைக்கும்போது, அவன் ஆற்றலுக்கும் மிஞ்சிய வகையில், அப்பாடல்களே, அவன் அறியாதபடி உயர்ந்த கலையறிவை உலகுக்கு அறிவிக்கக் காணுகின்றோம். அப்படி கம்பனுக்கு அவனறியாமல் அவன் புகழை உயர்த்திக் காட்ட நடனக் கலை - அவன் பாடிய பாடல்களில் புகுந்து மிளிர்வதைக் காணுகின்றோம். அப்படிப் பாவம் செய்த பாடல்களை கம்பராமாயணத்தில் புகுந்து கம்பனடிப்பொடியார் எடுத்துத் தந்துள்ளார்.

நடனக் கலையில் மிளிர்ந்த பல்வேறு இராகத்திலும், தாளத்திலும் உயர்வுபெற்று, கம்பரால் அறிய முடியாமல், அவர் ஆற்றலை உயர்த்திக் காட்டும் இராமாவதாரத்திலுள்ள 35 பாடல்களை கம்பனடிப் பொடியார் துருவி எடுத்து இக்கட்டுரையில் வாசகர்களுக்குக் கொடுத்துள்ளார்.

இராமாவதாரத்தில் உள்ள முதல் காப்புச் செய்யுளே இசையோடு நடன தத்துவத்தோடு அமைத்து, முத்தொழில் புரியும் திருமாலின் பெருமையை உணர்த்திக் காட்ட காணுகின்றோம்.

"உலகம் யாவையும்
 தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும்
 நீக்கலும், நீங்கலா -
அலகிலா - விளை
 யாட்டுடை யார்அவர்
தலைவர்; அன்னவர்க்
 கேசரன் நாங்களே!"

மேற்கண்ட பாடல் பூபாள இராகத்தில் ஆதி தாளத்தில் அமைந்து நம்மனத்தை நடன மாடவைக்கிறது.

விசுவாமித்திர முனிவரோடு இராமனும், இலக்குவனும் மிதிலைக்கு வருகிறார்கள்.

அப்போது உயர்ந்த மாடங்களில் கட்டப்பெற்றுள்ள தோரணக் கொடிகள் கீழ்நோக்கித் தொங்கும் அசைந்து ஆடுகின்றன. அவைகள் இராமன் முதலான மூவரையும் வருக! வருக! என்று கைகளால் அசைத்து வரவேற்கின்றன.

''கையறு மலரின் நீங்கி
யான் செய்மா தவத்தின் வந்து
செய்யவள் இருந்தாள் என்று,
செழுமணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி, அந்தக்
கடிநகர் நீட்டி, அந்தக்
கடிநகர் கமலச் செங்கன்
ஐயனை ஒல்லை வாவென்று
அழைப்பது போன்ற தம்மா!''

இராகம்: வசந்தா ஆதி: தாளம்

தோரணக் கொடிகள் என்ன சொல்லி, கைகளை அசைத்து வரவேற்கின்றன என்றால், ''இராமபிரானே! மகாலட்சுமி தான் செய்த தவப் பயனால் தாமரை மலரை விட்டு நீங்கி இங்கு வந்து வசிக்கிறாள். அவளைத் திருமணம் செய்து கொள்ள விரைந்து வருவாயாக!'' என்று கூறி கைகளை அசைத்துக் கொடிகள் வரவேற்கின்றன.

கொடிகளும் கைகளை அசைத்து நடனமாடி வரவேற்கின்றன. கம்பரையும் மிஞ்சி இசைவயத்தால் வாசகர்களின் மனமெல்லாம் வசந்தத்தால் துள்ளியாடுவதை இப்பாடலில் காணுகின்றோம்.

இப்படி இசைவயப்பட்ட பாடல்கள் காப்பியம் முழுவதும் ஆங்காங்கு ஒளிர்வதைக் காணுகின்றோம்.

போரெல்லாம் முடிந்து ஆனந்த வெள்ளத்தில் அனைவரும் அயோத்தி வந்தடைகிறார்கள். இராமபிரானுக்கு முடிசூட்டுவிழா நடைபெறுகிறது.

''அரியணை அனுமன் தாங்க
அங்கதன் உடைவாள் ஏந்த,
பரதன் வெண்குடை கவிக்க
இருவரும் கவரி பற்ற
விரைசெறி குழலி ஓங்க
வெண்ணெய்யூர்ச் சடையன் தங்கள்
மரபுளோன் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி!''

இராகம் : சௌராஷ்ரம் தாளம் : ஆதி

மங்கள வாத்தியம் முழங்க யாவரின் மனமும் குது கலத்தினால் மிளிர, குளிர்ந்த வேளையில் இராமர் பட்டாபிஷேகம் நடைபெறுகிறது.

சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் இராமபிரானின் திருவடியை அனுமன் தாங்கவும், அங்கதன் உடைவாள் ஏந்தி நிற்கவும், பரதன் வெண் கொற்றக் குடையைப் பிடித்து நிற்கவும், உலகம் போற்றும் வெண்ணெய் நல்லூரில் வாழும் சடையப்ப வள்ளல் குலத்தைச் சேர்ந்த ஒருவர் மணிமுடியை எடுத்துக் கொடுக்க, அதை வாங்கிக் குலகுருவான வசிட்டமுனிவர் இராமனுக்குச் சூட்டினார்.

என்னே! கம்பனின் இசைப்பாடல்! என்னே! ஆதி தாளத்தில் அமைந்த சௌராஷ்ர இராகம்! கம்பரே மயங்கி துள்ளும் இசையோடு பாடுகிறார். கம்பர் அறியாமலே இராமன் முடிசூட்டுவிழா அவர் மனத்தில் நாசுக்காக நடனமாடுவதைக் காணுகின்றோம்.

அந்த நடன இசையைக் கேட்டு கம்பனடிப் பொடியார் குதுகலமடைகிறார்.

***

# 15. பால காண்டம்

நல்லற நாயகன் இராமபிரானைப் போற்றி ''காசில் கொற்றத்து இராமன்'' என்றும் ''நடையில் நின்றுயர் நாயகன்'' என்றும் பாயிரத்திலே கம்பர் வாழ்த்தக் காணுகின்றோம்.

பாலகாண்டத்தில் இராமபிரானின் சிறப்பை கம்பர் வியந்து போற்றுவதை கம்பனடிப் பொடியார் இக் கட்டுரையில் நமக்கு எடுத்து இயம்பக் காணுகின்றோம்.

இராமபிரான் உருவத்தில் பேரழகு உடையவன். அதேபோல் அவன் குண அழகும் உடையவன். அவன் வசிட்ட முனிவரிடம் கல்வி கலைகளைக் கற்றவன். அவன் ஆசிரமத்தில் செல்லும்போது எதிர்ப்படும் மக்களைக் கண்டு, கனிவோடு பேசி மகிழ்விப்பான்.

''எதிர்வரும் அவர்களை எமையுடை இறைவன்
முதிர்தரு கருணையின் முகமலர் ஒளிரா'

இன்சொல் கூறி மக்களிடம் பழகும் இராமபிரானை, மக்களும் அவனை மனமார வாழ்த்தினார்கள்.

விசுவாமித்திரர் வேள்வியைக் காக்க தன் தம்பி இலக்குவனோடு இராமபிரான் சென்றபோது, குருவாகிய அவர் சொல் தட்டாமல் அவர் கூறிய செயல்களை எல்லாம் தட்டாமல் செய்து கொடுத்தான். இராமன் விசுவாமித்திரரை நோக்கி,

''மெய்ய! நின் உரை வேதம் எனக்கொடு
செய்கை அன்றோ! அறம் செயும் ஆறு என்றான்'',

மேலும் எதிர்ப்பட்ட தாடகையைக் கொல்ல சற்று தடுமாறிய போது, விசுவாமித்திரர் கூறியபடி தாடகை மீது அம்பைச் செலுத்தி அவள் உயிரைப் போக்கினான்.

"கல்லாப் புல்லர்க்கு நல்லோர்
சொன்ன பொருள் எனபோயிற்று!"

தாடகையோடு இராமபிரான் போர் செய்த நிகழ்ச்சியை "கன்னிப்போர்" என்றே கம்பர் குறிப்பிடுகிறார்.

இராமன் கால் தூசிபட்டு அங்கு கிடந்த கல் ஒன்று பெண்ணுருக் கொண்டதைக் கண்டு இராமன் வியந்தான். அப்பெண்ணின் வரலாற்றை விசுவாமித்திர முனிவர் எடுத்துச் சொன்னார். சாபம் தீர்ந்த அகலிகையைக் கௌதம முனிவரிடம் இராமர் ஒப்படைக்கும் போது,

"நெஞ்சினால் பிழைப்பு இலாளை
நீ ஏற்றருள்க!"

என்று கூறி கௌதமரிடம் அகலிகையை ஒப்படைத்தான்.

தாடகையை வீழ்த்திய கை வண்ணமும், அகலிகை சாபம் நீக்கிய கால் வண்ணமும் உடைய இராமபிரான் தம்பியோடும், விசுவாமித்திரரோடும் மிதிலைக்கு வருகின்றனர்.

ஜனக மன்னனால் வரவேற்கப் பெற்ற மூவரும் அரண்மனையில் விருந்தினர் விடுதியில் தங்குகின்றனர்.

மறுநாள் காலை ஜனகன் அரண்மனை மண்டபத்தில் விசுவாமித்திர முனிவர் ஓர் ஆசனத்திலும் இருபுறமும் உள்ள ஆசனங்களில் இராமபிரானும், இலக்குவனும் அமருகின்றனர். விசுவாமித்திரர், ஜனக மன்னருக்கு இருவரையும் அறிமுகம் செய்யும்போது,

விருந்தினர்கள்; நின்னுடைய வேள்வி
காணிய வந்தார் : வில்லும் காண்பார்
பெருந்தகைமைத் தயரதன் தன்புதல்வர் என
அவர் தகைமை பேசல் உற்றான்

என்று கூறுகிறார். இங்கு விசுவாமித்திரர் ஜனகரை நோக்கி, "இவர்கள் தசரதனுடைய புதல்வர்கள், விருந்தினர்களாக வந்துள்ளனர்.

மன்னனே நீ செய்யப்போகும் வேள்வியையும் காண வந்துள்ளனர். அதோடுமல்ல வில்லை முறித்தவர்களுக்கே சீதையைத் தருவோம் என்று கூறியிருக்கிறீர்கள். அப்படிப்பட்ட அந்த வில் போட்டியிலும் கலந்து கொள்ளப் போகிறான் இராமன் என்று இராமனைப் பார்த்தபடியே ஜனகரிடம் கூறுகிறார்.

விசுவாமித்திரர் கூறுவதிலிருந்து, இராமன் எப்படியும் வில்லை முறித்துவிடுவான். அதனால் இராமன் சீதையை திருமணம் செய்யப் போகிறான் என்பதை அறிந்தே இராமனை விசுவாமித்திரர் மிதிலைக்கு அழைத்து வந்திருக்கிறார் என்பதை நாம் திட்டவட்டமாக அறிய முடிகிறது. அதற்கு முதற்காட்சியாக மாடத்திலிருந்த சீதையைப் பார்க்கும் வகையில் இராமபிரானை வழிநடத்திச் சென்றார் விசுவாமித்திரர் என்பதையும் நாம் அறிகிறோம்.

அடுத்து இராமனுடைய தோள் அழகை வியந்து பெண்கள் பாராட்டும் ஒரு நிகழ்ச்சியையும் கம்பனடிப் பொடியார் நமக்குத் தந்திருக்கிறார்.

தாடகையை வதம் புரிந்த இராமனுடைய தோள், அகலிகைக்கு விமோசனம் அளித்த திருவடி, சிவதனுசுவை முறித்த தடக்கை இவைகளின் ஆற்றலைக்கூறிய கம்பர், இராமன் தெருவில் தேரில் வரும் காட்சியை.

> ''தோள் கண்டார் தோளே கண்டார்
> தொடுகழல் கமலம் அன்ன
> தாள்கண்டார் தாளே கண்டார்,
> தடக்கை கண்டாரும் அஃதே''

தேரில் சென்ற இராமபிரானைக் கண்ட வீதியோரம் இருந்த பெண்கள் இராமனுடைய முழு அழகையும் பார்க்க முடியாமல் திண்டாடினர்.

கையின் அழகைக் கண்டவர்கள் திருவடியைக் காணமுடியவில்லை. அதற்குள் தேர் விரைந்து சென்று விடுகிறது. என்னே இராமபிரானுடைய தோள்? தாள்? கைகள்?

சீதையின் திருமணத்தைக் காண பலவிடங்களிலிருந்தும் மக்கள் திரள வந்தனர். தேர்மிசை வந்தார் சிலர். சிலர் பல்லக்கில் வந்தனர். பலர் பலவிதமான வாகனங்களில் வந்தனர். ஆண்யானை மீது வந்தனர் சிலர். எளிய மக்கள் நடந்து வந்தனர். நடந்து வந்து சேர்வோரே பார்மிசை வருவாரும்'' என்று குறிப்பிடுகிறார்.

வேள்விமுன் சீதா கல்யாணம் நடைபெறுகிறது. இராமரும் சீதையும் ஒன்றி அமர்ந்த காட்சியை,

மன்றலின் வந்து மணத்தவிசு ஏறி
வென்றி நெடுந்தகை வீரனும், ஆர் வத்து
இன்துணை அன்னமும், எய்தி இருந்தார்
ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார்.

இராமனும் சீதையும் போகமும் யோகமும் போல அமர்ந்திருந்தனர். ஜனகன் தன்மகளின் கையை, இராமன் கைகளில் வைத்துத் தாரை வார்த்துக் கொடுத்து,

''மலர்மகளும் திருமாலும் போல்
நீ என் மகள் சீதையுடன்
நிலைபெற்று வாழ்க''

என்று வாழ்த்தினார்.

பாலகாண்டத்தின் மங்கள நிகழ்ச்சியாக பரசுராமன் இராமனிடம் சரணாகதி அடையும் நிகழ்ச்சியைக் காட்டுகிறார் கம்பர்.

பரசுராமன் இராமனை நோக்கி, ''அடபயலே'' நீ முறித்தது மக்கிப்போன சிவதனுசு. நீ வல்லவன் என்றால்

என்னிடமுள்ள இந்த திருமால் வில்லை வளைத்து நாணேற்று பார்க்கலாம்'' என்று சவால் விடுகிறான்.

அப்போது இராமபிரான் அந்த விஷ்ணு தனுசை வாங்கி வளைத்து நாணேற்றி, ''இதற்குக் குறியாது?'' என்று கேட்டான். உடனே பரசுராமன் ''என் தவங்கள் முழுவதையும் ஏற்றுக் கொள்வாயாக'' என்று கூறிச் சரணாகதி அடைகிறான் பரசுராமன். இராமன் விஷ்ணு தனுசுவை வளைத்து நாணேற்றி பரசுராமனின் தவஆற்றல் முழுவதையும் பெறுகிறான்.

என்னே இராமன் ஆற்றல். தன் தவம் முழுவதையும் இழந்த பரசுராமன் இராமனை வாழ்த்தி விடைபெற்றுச் செல்லுகிறான்.

இவ்வாறு கம்பனைப் பொடியார் இராமாவதாரத்தின் முதல் காண்டமாகிய பால காண்டத்தின் நிகழ்ச்சிகளை வரிசையாகத் தந்து ''நடையில் நின்றுயர் நாயகன்'' பெருமையை வளம்படக் கூறக் காணுகின்றோம்.

***

## 16. கம்பனின் அற்புதப் படைப்பு

கம்பனின் அற்புதப் படைப்பாக அனுமனின் மதி நுட்பத்தையும், அவன் வாக்கு வன்மையையும், சீதையின் தோழி செயலையும் இரண்டிடங்களில், கம்பனடிப் பொடியார் சுட்டிக்காட்டக் காணுகின்றோம்.

அசோகவனத்தில் சீதையைக் கண்டதையும், உரையாடியதையும் நாடகப் பாங்கில் இராமபிரானிடம் அனுமன் எடுத்துக் கூறுகிறான். ஒரு மணி நேரத்தில் கூறக் கூடிய செய்தியை இராம பிரானிடம் வந்த அனுமன், குறுகிய நேரத்தில் தன் குறிப்புச் செயல் வெளியீட்டால் அறிவிக்கிறான் அனுமன்.

இராமபிரானை வந்தடைந்த அனுமன் வழக்கப்படி உடலை வளைத்து வாய்புதைத்து இராமபிரானை வணாங்காமல், சீதையை நோக்கி தலைவைத்து, அத்தலையின் மேல் கரங்கள்ளைக் குவித்து வைத்து, பூமியின் மேல் படுத்த நிலையில். சீதை இலங்கையில் இருக்கிறாள் என்பதை குறிப்புச் செயலால் இராமபிரானுக்கு உணார்த்து கிறான் அனுமன் கம்பநாடகத்திற்கு அரிய சான்றாக இங்கு அனுமன் செயல்பாடு அமையக்கண்டோம். அனுமன் செயலைக் கண்ட அவன் மெய்யறிவை குறிப்பால் அறிந்து விடுகிறான் இராமன். பின் எழுந்த நிலையில், சீதை கற்புடன் அங்கு இருக்கிறாள் என்பதை இராமனுக்கு முதலில் அறிவிக்க எண்ணிய அனுமன்

''கண்டனென் கற்பினுக்குக் அணியை கண்களால்''

சீதை கற்புடையவளாயிருக்கிறாள் என்பதை அவள் தன் கண்களாலே எனக்கு முதலில் தெரிவித்துவிட்டாள் என்பதை இராமபிரான் அறியும் பொருட்டு, முதற்கண் எடுத்த எடுப்பிலேயே ''கண்டனென் கற்பினுக்கு அணியைக் கண்களால்'' என்று கூறும் அனுமன் சொற்களை கம்பனடிப் பொடியார் திறம்படச் சுட்டிக் காட்டுவதைக் காணுகின்றோம். அனுமனின் அற்புதப் படைப்பை இங்கு கம்பனடிப் பொடியார் சுட்டிக் காட்டுகிறார்.

கற்பினுக்கு அணியையாகக் கண்ட செய்தியை உரைக்கும் மாருதியின் கூற்றைத் தொடர்ந்து இரு பாடல்களிலே கம்பனடிப் பொடியார் குறிப்பிடுகிறார்.

''குடிப்பிறப்பு என்ற ஒன்றும்
மிக்க பொறுமை என்ற ஒன்றும்
ஒழுக்க சீலம் என்ற ஒன்றும்''

அனுமன் சொல்லில் கைகோர்த்துக் கொண்டு வருவதோடு, அவன் ஆனந்தக் கூத்தையும் காண்கிறோம். சீதையிடம் கற்பு நடம்புரிவது போல், அனுமனிடம் சீதையாம் தெய்வம் உவந்தாடக் காண்கிறோம்.

அனுமனின் உள்ளம் களிப்பால் ஆடுவது போல, முன்பொரு நடனத்தையும் சீதையின் தோழி ஆடினாள் என்று கம்பர் குறிப்பிடுகிறார்.

இராமன் சிவதனுசுவை முறித்துவிடுகிறான். அதைக் கண்ட சீதையின் தோழிக்கு ஆனந்தம் கரை புரண்டோடு கிறது. அந்த மகிழ்ச்சியுடன் சீதையிடம் செய்தியை தெரிவிப்பதற்காக அந்த தோழி களிப்புடன் ஓடிவருகிறாள்.

"அந்தம் இல் உவகையள் ஆடிப்பாடினாள்!"

என்று கம்பர் குறிப்பிடுகிறார். சீதையிடம் அந்தச் செய்தியைத் தெரிவிக்கும் நிகழ்ச்சி நாடகம் போல பாடலிலே அமைத்துக் காட்டுகிறார் கம்பர். அதை நளினமுடன், அற்புதப் படைப்பாய் - கம்பனடிப் பொடியார் நமக்கு கொடுத்துரைக்கிறார்.

***

## 17. கவிஞனைப் போற்றிய கவிஞன்

தமிழகத்திற் பிறந்த கவிஞர்களில் மகாகவி பாரதியாரும் தனிப்பெருமை உடையவர். கம்பரை உயர்த்திப் பாடும் பாரதியாரும், எல்லாக் கலைகளைக் கற்றவனும் வேதக் கடலும் ஆவான்.

பாரதியார் எல்லாத் துறைகளிலும் ஆழ்ந்த அறிவுடையவன் ஆவான். நாடு, சமயம், அரசியல், தத்துவம் அனைத்திலும் ஈடுபாடு கொண்டவன். பாரத விடுதலைக்கான பாடல்களைப் பாடியதோடு, விடுதலைக்குப் போராடிய அத்தனை தியாகிகளையும் வாழ்த்திப் பாடிய பெருமையை உடையவர் பாரதியார் ஆவார். அவர் பாடிய கவிதை, செய்யுள், காப்பியம், வசன கவிதை, கட்டுரைகள் யாவும் எளிமையுடன் உணர்ச்சிகளை ஊட்டக்கூடியவனாக மிளிர்கின்றன.

மக்களிடம் வேற்றுமை கூடாது என்று பக்குவ மாகக் கூறியவர் பாரதியார் ஆவார்.

''எல்லோரும் ஓர் நிறை எல்லோரும் ஓர்விலை''

''எல்லோரும் இந்நாட்டு மன்னர்''

என்று வெற்றிமுரசு கொட்டியவர் பாரதியார்.

தமிழின் தனிப்பெருமையை உணர்த்த வந்த பாரதியார்,

''யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல்
இனிதாவது எங்கும் காணோம்''

என்று பெருமிதத்தோடு பாடுகிறார்.

உலகப் புலவர்களில் தமிழ்புலவர்களுக்கு தனிச் சிறப்பு உண்டு. தமிழ்ப்புலவர்களுக்கே முதலிடம் நல்குகிறார் பாரதியார். கம்பன் பெருங்காப்பியம் படைத்தவன். வள்ளுவர் நல்லறம் பாடியவர். இளங்கோ வரலாற்றுக் காப்பியம் படைத்தவன். மூவருமே சிறந்தவர்கள். உலகக் கவிகளில் சிறந்த தமிழ்ப்புலவர்களை வரிசைப்படக் கூறவந்த பாரதியார்.

''யாம் அறிந்த புலவரிலே
கம்பனைப்போல்
வள்ளுவன் போல், இளங்
கோவைப் போல்
பூமிதனில் யாங்கணுமே
பிறந்ததில்லை!
உண்மை வெறும் புகழ்ச்சி இல்லை''

இப்பாடல் மூலம் பாரதியார், கம்பன்பால் பெருமதிப்புக் கொண்டிருந்தார் என்பதை அறிகிறோம். கம்பரின் சந்தக் கவிதைகளில் ஈடுபாடுமிக்க பாரதியார்,

''கன்னனொடு கொடையோயிற்று உயர்கம்ப
நாடனுடன் கவிதை போயிற்று''

என்று மற்றோர் இடத்தில் கம்பனின் கவியாற்றலைப் புகழ்கிறார் பாரதியார். கற்றோரைக் கற்றோரே அறிவர். அதுபோல் மகாகவியை மகாகவியே அறிந்து போற்றக் காணுகின்றோம்.

கம்பன் காவியத்தையும், பாரதியார் கவித் தொகுப்பையும் நன்கு ஒப்பாய்ந்து நுணுக்கங்களையெல்லாம் வெளிப் படுத்துகிறார் கம்பனடிப் பொடியார், என்னே! அவர் ஆற்றல்,

கம்பரின் எல்லையில்லாப் புலமையை பாரதியார் சுட்டிக் காட்டும் ஓரிடத்தைக் கூறவந்த கம்பனடிப் பொடியார்,

"எல்லை ஒன்று இன்மை எனும் பொருள் அதனைக்
கம்பன் குறிகளால் காட்டியமுயலும்
முயற்சியைக் கருதியும்"

என்று கூறும் பாரதியின் புலமையையும் கண்டு வியக்கிறார் கம்பனடிப் பொடியார். மகாகவி பாரதியார், மகாகவி யாகிய கவிச்சக்கரவர்த்தி கம்பரைப் போற்றுவதை இக்கட்டுரையின் மூலம் கம்பனடிப் பொடியார் விளக்கக் காணுகின்றோம்.

"வாழ்க மூவரின் திறங்கள்"

***

## 18. கம்பன் உவமைகள்

கவிதைத் தச்சன், காப்பியக் கலைஞன் என்று போற்றப்படும் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் காவிய முழுவதும் இடையிடையே உவமைகளைக் கூறி நிகழ்ச்சி களை எளிதில் பதியவைக்கும் உத்தியைக் கையாளக் காணுகின்றோம்.

கம்பனடிப் பொடியார், கம்பர் காவியத்திலிருந்து 14 உவமைகளை நமக்கு தொகுத்தளிக்கக் காணுகின்றோம்.

நாம் உண்பதிலும், உடுப்பதிலும், அனுபவிப் பதிலும், ஆசைப்படுகிறோம். அதேபோல ஒரு பூனை பாற்கடலைக் காணுகின்றது. பாற்கடலிலுள்ள பால் முழுவதையும் குடிக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறது. ஆனால் அது முடியுமா? அதேபோல் இனிய இராமன் கதையை என் கவிகளால் உண்டாக்க ஆசைப்படுகிறேன் என்கிறார் கம்பர். ஓசை பெற்று உயர் பாற்கடல் உற்று, பூசை, முற்றவும் நக்குபு புக்கென, ஒரு ஆசை பற்றி அறையலுற்றேன்.

என்கிறார் கம்பர் தமக்கேற்பட்ட ஆசையை ஓசை யுடனும் உவமையுடன் கூறுவதை கம்பனடிப் பொடியார் நமக்கு முதல் உனவமையாகக் காட்டுகிறார்.

கம்பனடியார் கூறும் 14 உவமைகளையும் நாம் படிக்கும்போது பரவசத்தால் நம் உள்ளம் துள்ளுவதை அறிகிறோம்.

இராமர், சீதை இலக்குவன் மூவரும் காட்டிற்குள் செல்கிறார்கள். அவர்களைக் காணவருவது போலச் சந்திரன் தோன்றுகிறான். அந்தச் சந்திரனின் திருமுகம் எப்படிக் களிப்படைகிறதென்றால்,

> ''களிப்பொடு காணவந்த தருமத்தின் வதனம் என்னப்
> பொலிந்தது தனி வெண் திங்கள்''

என்கிறார் கம்பர். இராம இலக்குவரைக் களிப்புடன் காணவந்த தரும தேவதையின் திருமுகம் போலச் சந்திரன் ஒளிபெற்று தோன்றியது என்கிறார். கம்பர் இதனை ஒளிபடைத்த கண்களையுடைய கம்பனடிப் பொடியார் கண்டு நமக்கு எடுத்துரைக்கிறார்.

***

# 19. கம்பன் கண்ட கொடியோர்

கம்பன் காவியக் கோவிலிலே நல்லோரும், கொடியோரும் வீற்றிருக்கக் காணுகின்றோம். கூனி, தாடகை, சூர்ப்பணகை, மகோதரன், இரணியன், இராவணன் போன்ற கொடியோர் கம்பன் பூங்கோவிலிலே இருப்பதைக் காணுகின்றோம்.

நேரிடையாக இராமபிரானைத் தாக்க வரும் கொடியவள் சூர்ப்பனகை ஆவாள். கம்பன் சூர்ப்பணகையைக் குறிப்பிடும்போது,

''நீல மாமணி நிருதர் வேந்தனை
மூல நாசம் பெற முடிக்கும் மொய்ம்பினாள்''

என்று கூறுகிறார். நீலமணியைப் போன்ற நிறத்தோடு விளங்கும் இலங்கை வேந்தன் இராவணனை வேறொடும் தொலைத்துக் கட்டவந்தவள் சூர்ப்பணகை ஆவாள்.

பஞ்சவடிக்கு வந்த சூர்ப்பணகை, தனியனாய் அமர்ந்திருந்த இராமனைக் கண்டதும் அவனைக் கணவனாக அடைந்தே தீருவேன் என்று, இராமன் அழகில் ஈடுபடுகிறாள், அப்போது அவள் கொடியவள் என்பதைக் குறிப்பிடவந்த கம்பர்,

''கண்டனள் தன் கிளைக்கு இறுதி காட்டுவாள்''

என்று அவளை அறிமுகப்படுத்தி "சூர்ப்பணகை தன்னுடைய சுற்றத்தார்க்கு முடிவு காலத்தைக் காட்டவந்தவள்'' எனக் குறிப்பிடுகிறார்.

கதை தொடர்கிறது. இந்நிலையில் சூர்ப்பணகை தன்னுடைய சுற்றத்தார்க்கு முடிவு காலத்தைக் காட்ட வந்தவள்'' எனக் குறிப்பிடுகிறார்.

கதை தொடர்கிறது. இந்நிலையில் சூர்ப்பணகைக்குப் கொடியவனாக வந்த இலக்குவன் சூர்ப்பணகையின்

கூந்தலைப் பற்றியிழுத்து, அவள் மூக்கு முதலியவற்றை அறுத்தெறிந்து விரட்டிவிடுகிறான். சூர்ப்பணகை மூக்கறு பட்ட மூளியாகக் கதறிக்கொண்டே ஓடுகிறாள். கானகத்தே இருந்த கரனின் உதவியை நாடுகிறாள். கரனும்-கரனுடன் வந்த தூடணனும் இராமனுடன் போரிட்டு மடிகிறார்கள். தன் சுற்றத்தார் இறப்பதற்குக் காரணமான சூர்ப்பணகை, தன் அண்ணனாகிய இராவணனையும் மூல நாசம் செய்ய, இலங்கைக்கு வந்து, அண்ணனிடம் முறையிடுகிறாள். இராவணனுக்கு சீதையின் மேல் காமத்தை உண்டாக்கி, அவன் இறப்பதற்கும் காரணமான கொடியவள் ஆகிறாள் சூர்ப்பணகை. தன் பேச்சாலே, சீதையின் எழிலை இராவணனுக்கு எழிலோவியமாகக் காணச் செய்து இச்சையை உண்டாக்கியவள் சூர்ப்பணகை ஆவாள். இதனால் பின்னர் இராவணயுத்தம் பயங்கரமாக நடக்கிறது. இராவணன் அழிவிற்கு அடிப்படைப் பகையாளி சூர்ப்பணகை ஆவாள். இறந்த இராவணன் உடலைக் கட்டிக்கொண்டு பிரலாபிக்கும் அவன் மனைவியாகிய மண்டோதரியின் புலம்பலிலே, அவளுக்குக் கொடியவர் களாக காட்சியளிப்போர் பலராவர். மண்டோதரி புலம்பும்போது,

> ''காந்தையருக்கு அணி அனைய ஜானகியார்
> பேரழகும் அவர்தம் கற்பும்
> ஏந்துபுயத்து இராவணனார் காதலும்
> அச்சூர்ப்பணகை இழந்த மூக்கும்
> வேந்தர் பிரான் தயரதனார்
> பணியதனால் வெங்கானில் விரதம்பூண்டு
> போந்ததுவும் கடை முறையே புரந்தரனார்
> பெருந்தவமாய்ப் போயிற்று அம்மா!''

என்று கூறுகிறாள். மண்டோதரிக்கு எவை எவை கொடியனாக இருந்தது என்பதை அவள் புலம்பலிலிருந்து அறிகிறோம். ஜானகியின் பேரழகும், கற்பும் மண்டோதரிக்கு பகையாகும்.

சீதையின் மீது இராவணன் கொண்ட காதலும் பகையாகும். இழந்த மூக்கோடு வந்த சூர்ப்பணகையும் பகையாகக் காட்சியளித்தாள். சூர்ப்பணகைக்கு மூக்கறு படாவிட்டால் தன் கணவனுக்கு இந்த நிலை ஏற்பட்டிருக்காதல்லவா? அந்தப் பாவி கொடியவள் பொறாமையாலும், பேராசை யாலும் பற்றவைத்த ஒரு நெருப்புப் பொறியே நம் அரக்கர் குலத்தையே சுட்டெரித்துவிட்டதல்லவா? என்று புலம்பி மண்டோதரி இறக்கக் காணுகின்றோம்.

***

## 20. வரலாற்றை மறந்தமையால் வந்த குழப்பம்

பால காண்டத்தில் குலமுறைகிளத்துப் படலத்தின் முதல் பாட்டின் முதல் வரி

> ''ஆதித்தன் குல முதல்வன்
> மனுவினை யார் அறியாதார்?''

என்பதாகும்.

மேற்கண்ட வரிக்கு வை.மு. கோபாலகிருஷ்ண மாச்சாரியார் ஆதித்தன் என்ற சோழனுடைய குல முதல் புத்திரனான மனுச் சக்கரவர்த்தியை எல்லோரும் அறிவர், என்று குறிப்பிடுகிறார்.

அதே வரிக்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பு'' சூரியனது குலத்துக்கு முதல் புதல்வனாகத் தோன்றிய வைவசுதன் என்ற மனுச் சக்கரவர்த்தியை எல்லோரும் அறிவர், என்று பொருள் கூறுகிறது.

முதலில் கூறிய வை.மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் வரலாற்றை அறிந்தவர். ஆதித்தன் என்பவன் கம்பனின் நண்பன்-விஜயாலய சோழனின் மைந்தன் ஆவான்.

அவன் வைவசுதன் அல்ல, என்று கம்பனடிப் பொடியார் குறிப்பிடுகிறார்.

காரணம் கி.பி. 871லிருந்து 907 வரை ஆட்சி செய்தவன், அதனால் அச்சோழன் கோதண்டராமன் என்று தன் பெயரை மாற்றிக் கொண்டவன். அவனுடைய பள்ளி படைக்கோவில் காளத்திக்குப் பக்கத்திலுள்ள தொண்டை நாடு என்ற இடத்தில் உள்ளது. அங்குள்ள கல்வெட்டில் ''கோதண்டராமேச்சுரம் என்ற ஆதித் தேச்சுரம்'' என்று குறிப்பிடப்படுகிறது. அந்தக் கோவிலை எடுத்தவன் அவன் மைந்தனாகிய முதல் பரந்தாமன் (கி.பி. 970-955) ஆவான். எனவே இந்தப் பாட்டில் குறிப்பிடும் ஆதித்தன் என்பவன் முதல் ஆதித்தன் ஆவான். அவனுடைய குலத்துக்கு முதல்வன் மனு ஆவான் என்று பொருள் கொள்வதே சரி என்று கம்பனடிப் பொடியார் ஆய்ந்து தன் முடிவைக்கூறுவது போற்றுவதற்குரியதாகும்.

மேலும் மற்றோர் இடத்திலும் இருவேறுபட்ட கருத்துக்களைக் கம்பனடிப் பொடியார் சுட்டிக்காட்டுகிறார்.

பரதன், கோசல நாட்டிலிருந்து அயோத்திக்கு திரும்பி வருகின்றான். தன் தாய் கைகேயி கேட்டவரத்தால் அண்ணன் இராமபிரான் காடு சென்றதை அறிகிறான். தன் தாயைப் பழிக்கிறான். பின் கோசலையிடம் சென்று பலவாறு கூறி வருந்திப் புலம்புகிறான் பரதன். பரதன் உள்ளத்தூய்மையைக் கண்ட கோசலை பரதனைத் தேற்று கிறாள். அப்போது பரதன் சூளுரைத்த 18 பாடல்களில் ஒன்றில்,

''கரும் பலர் செந்நெல் அம்
கழனிக் கான நாடு''

என்ற வரியுள்ளது. அந்த வரிக்கு இருவேறுபட்ட கருத்துக் களைக் கம்பனடிப் பொடியார் எடுத்து, எந்த உரை சரியானது என்பதையும் தனது ஆய்வில் குறிப்பிடுகிறார்.

''கரும்பலர் செந்நெல்அம்
கழனிக் கானநாடு''

என்பதற்கு ''கரும்பைப் போல செழிப்பாக வளரும் வளமிக்க நன்செய் நிலங்களைக் கொண்ட கான நாடு'' என்று வை.மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் பொருள் கூறுகிறார்.

ஆனால் அதே வரிக்கு பொருள் கூற வந்த அண்ணாமலை பல்கலைகழகப் பதிப்பு'' கரும்பையும் பரவிய செந்நெல் பயிரையுமுடைய அழகிய கழனிக் காட்டை உடைய நாடு,'' என்று குறிப்பிடுகிறது.

''அலர் என்ற சொல் உவம உருபாகும். எனவே ''கரும்பைப்போலச் செழிப்பாக வளர்ந்துள்ள செந்நெல் என்று குறிப்பிடுவதே சரியானது என்று கம்பனடிப் பொடியார் குறிப்பிடுகிறார். அப்படிக் குறிப்பிடும்போது திருஞானசம்பந்தரும் அலர் என்ற சொல்லை உவம உருபாகவே கொண்டு பாடல் இயற்றியுள்ளதைச் சான்று காட்டி விளக்கக் காணுகின்றோம்.

மேற்கண்ட இரு இடங்களையும் கம்பனடிப்பொடியார் சுட்டிக்காட்டி யாருடைய உரை சிறந்தது என்பதை நுட்ப அறிவால் விளக்கிக்காட்ட ஓர் கட்டுரைத் தலைப்பையே அமைத்து நம் மனத்தையும் தெளிய வைக்கக் காணுகின்றோம்.

***

## 21. இராவண வதத்திற்கு உதவிய இரு நிகழ்ச்சிகள்

இராம அவதாரத்தின் நோக்கமே இராவண வதம் ஆகும். இராவணன் பேராற்றல் படைத்தவன். அவன் படைபலம் மிக்கவன். ஆயிரம் யானைகள், பதினாயிரம்

தேர்கள், ஒருகோடி குதிரைகள், ஆயிரம் கவந்தப் பேய்கள் - இப்படி நிறைய படைபலம் கொண்ட இராவணன் இலங்கை மாநகரம் மிக்க பாதுகாப்பை உடையது. கடலே அந்நகருக்கு அகழியாய் அமைந்துள்ளது. அதன் மதில் வானத்தை முட்டிக் கொண்டு இருக்கிறது. சூரியன் கூட இலங்கை மதிலைத் தாண்ட முடியாமல் வடக்கு தெற்குமாக சுற்றிச் செல்கிறது. அப்படிப்பட்ட படைபலமும், பாதுகாப்பும் மிகுந்த நாடும் கொண்டவன் இராவணன்.

இப்படிப்பட்ட வல்லமை பெற்ற இராவணனை இராமபிரான் வென்றான் என்றால் அதற்குரிய பயிற்சி யினைக் கொடுத்தவர் விசுவாமித்திர முனிவர் ஆவார்.

முதலிலே இராமன் இராவணன் பாட்டியாகிய தாடகையைக் கொல்கிறான். அது முதற் பயிற்சியாகும். மேலும் விசுவாமித்திர முனிவர் வேள்வியைக் காக்கும் போது அரக்கர் பலரையும், சுவாகுவையும் கொல்கின்றான், இராமன். ஆனால் மாயையில் வல்ல மாரீசனோ தப்பி ஓடி மறைகிறான். ஆனால் பின்பு மாயமானாக உருவெடுத்து வந்த நிலையில் கொல்லப்படுகிறான். விசுவாமித்திர முனிவர் வேள்வியைக் காத்த இராமனின் ஆற்றலைப் பாராட்டி பல்வேறு தெய்வப் படைக்கலங்களை இராமனுக்குக் கொடுக்கிறார். எனவே இராவண வதத்திற்கு வித்திட்டவர் விசுவாமித்திர முனிவர் ஆவார்.

அடுத்து இராவண வதத்திற்கு முக்கியமான இரு நிகழ்ச்சிகளை சுட்டிக்காட்டுகிறார், கம்பனடிப் பொடியார். அதுவே இக்கட்டுரையின் தலைப்புமாகும்.

முதற்கண் பரசுராமனின் ஆற்றலையும், தவப்பயன் முழுவதையும் இராமன் பெறுகின்ற நிகழ்ச்சியே முதல் நிகழ்ச்சியாகும். பரசுராமன் வைத்திருந்த திருமால் தனுசுவை நாணேற்றும் இராமபிரான், இதற்குரிய இலக்கு யாது என்று கேட்க, பரசுராமன் வேறு வழியின்றி "தன்னுடைய

தவப்பயன்களே'' அதன் இலக்கு என்று கூற, இராமன் நாணேற்றுகின்றான். பரசுராமனின் தவப்பயன் அனைத்தையும் அக்கணை உண்டு மீண்டது. எனவே, பரசுராமனின் தவப்பயன் முழுவதையும் பெற்ற ஆற்றல் இராவண வதத்திற்கு உதவியாய் இருந்தது என்பதை அறிகிறோம்.

இரண்டாம் நிகழ்ச்சி வாலிவதம் ஆகும். வாலி இராவணனுக்கு உதவி செய்வதில் நெருங்கிய நட்புடையவன். வாலியுடன் யார் மோதினாலும், மோதியவனுடைய பலத்தில் பாதியை வாலி ஏற்கின்ற வரபலம் கொண்டவன் வாலி. முன்னர் இராவணனை தன் வாலில் பிணைத்து வானும் மலையும், காடும், கடலும் தாவித்திரிந்த பேராற்றல் உடையவன் வாலி. எனவே இராவணன் வாலியைப் பணிந்து நட்பாகக் கொண்டவன். அப்போது, வாலி இராவணனிடம் எப்போது வேண்டுமானாலும் உனக்கு நான் உதவி செய்யத் தயார் என்றான். மேலும், வாலிக்கு எழுபது வெள்ளம் சேனை உள்ளது. அதனையும் கொடுத்து உதவுவதாக வாலி கூறியிருக்கிறான். இப்போது இராமன் வாலியை மறைந்து நின்று அம்பு விட்ட காரணத்தினால், வாலி இறந்தான். இதனால் வாலியின் உதவியும், வாலியினுடைய எழுபது வெள்ளம் படையும் இராவணனுக்குக் கிடைக்காமல் செய்ய - இராமபிரான் வாலியை கொல்கின்ற நிகழ்ச்சியும் நடைபெற்றதைக் காணுகின்றோம்.

எனவே பரசுராமனின் ஆற்றலை அழியச் செய்ததும், வாலிக்கு மோட்ச பதவியைக் கொடுத்ததும், இராவண வதத்திற்கு-இராமனுக்கு உதவிய இரு நிகழ்ச்சிகளாயிருப்பதை ஆய்ந்து நமக்கு எடுத்துக் கூறியவர் - கம்பனடிப் பொடியார் ஆவார். என்னே! கம்பனடிப் பொடியாரின் ஆய்வுத்திறன்.

***

## 22. இலக்குவனுக்கு இணை...!

கம்பராமாயணத்தில் இலக்குவனுடைய படைப்பு அற்புத சிருஷ்டியாகும். இலக்குவன் பாத்திரம் பெரும் பாத்திரமா? சிறு பாத்திரமா? துணைப்பாத்திரமா?

மூன்று பாத்திரப் படைப்புக்களின் சிறப்பினை நமக்கு முதலில் நினைவூட்டுகிறார் கம்பனடிப் பொடியார்.

ஒரு காப்பியத்தின் தூண்களே பெரும் பாத்திரமாகும். தூணின்றி மண்டபம் இல்லை. காப்பியத்தின் பெரும் பகுதியை ஏற்கும் பாத்திரம் பெரும் பாத்திரமாகும். பெரும் பாத்திரமே காவியத்தின் கட்டுக் கோப்பாகும். அவை இல்லாவிட்டால் காவியம் சிதைந்துவிடும்

சிறு பாத்திரம் ஒரு மண்டபத்தில் அமைந்த சிற்பம், தோரணை போன்றவை. காவியத்தை எழிலூட்ட இடை யிடையே வருவன சிறுபாத்திரமாகும். எனினும் அது இல்லாவிட்டால், கதை பாதிக்கப்படாது நிகழும். எனினும் அவைகள் கதையோட்டத்திற்கு உறுதுணை செய்வன ஆகும்.

துணைப்பாத்திரம் என்பது பெரும்பாத்திரங்களை தோய்வின்றி இயங்க வைப்பது ஆகும். கதை ஊட்டமுடன் செல்ல துணைப்பாத்திரம் தேவையாகும்.

இலக்குவனுடைய பாத்திரம், பெரும் பாத்திரம் அன்று. சிறு பாத்திரமும் அல்ல. கதையின் தொடக்க முதல் இறுதி வரை இலக்குவன் நீக்கமறக் காவியத்தில் இடம்பெறு கிறான். அவன் துணையின்றி இராமபிரானின் இயக்கம் நடைபெறாது. துணைப் பாத்திரமாக இலக்குவனை அமைத்து காவியத்தை வெற்றியடையச் செய்கிறார் கம்பர். இதனைப் பல எடுத்துக்காட்டுகளுடன் கம்பனடிப் பொடியார் விளக்கக் காணுகின்றோம்.

இலக்குவனுடைய ஆற்றலைப் போற்றி, இராமபிரான் இலக்குவனை நோக்கி,

"இலக்குவ! உலகம் ஓர் ஏழும் -
ஏழும் நீ கலக்குவென்
என்பது கருதினால் அது விலக்குவது அரிது"

பதினான்கு உலகத்தையும் கலக்கக்கூடிய ஆற்றலைப் பெற்றவன் இலக்குவன் என்று வியந்து பாராட்டுகிறான் இராமபிரான்.

மரவுரி தரித்த இராமன் முன் தானும் மரவுரி தரித்து உடன்செல்ல புறப்படுகிறான் இலக்குவன். இராமனுடைய தம்பியாகவோ, தோழனாகவோ செல்லவில்லை. எஜமானுக்கு அடிபணிந்த ஒரு வேலைக்காரனாகவே செல்கிறான், இலக்குவன் இதனை அனுமனிடம் உரையாடும்போது,

"இந்நெடும் சிலைவானுக்கு ஏவல் செய்
அடியேன் யானே"

என்று குறிப்பிடக் காணுகின்றோம். இங்கு அனுமனிடம் கூறும்போது தான் பணிசெய்யும் அடியேன் என்று இலக்குவன் குறிப்பிடுவது பெருந்தன்மையைக் காட்டுவ தாகும்.

இராமனும் சீதையும் தங்குவதற்கான பர்ணசாலையை இலக்குவனே அமைத்துச் சேவை புரிந்தான். இராமபிரானே அவனுடைய பர்ணசாலை அமைக்கும் திறத்தைப் பாராட்டக்காணுகின்றோம்.

இராமபிரான் 14 ஆண்டுகள் காட்டில் வாழுகின்ற விரதத்தை மேற்கொண்டதால், வாலி மோட்சத்திற்குப் பின் சுக்ரீவனுக்கு முடிசூட்டும் பொறுப்பை இலக்குவனே ஏற்கிறான். அதேபோல இராவணனுக்கு பின் இலங்கைக்கு உரியவனாகிய விபீடணனுக்கும் முடி சூட்டும் பொறுப்பை இலக்குவனே ஏற்கிறான்.

எனவே இலக்குவன் இராமபிரானுக்கு அமைச்சனாகவும், தூதனாகவும் பரிவுடைத் தாய்போல் காப்பவனாகவும், போர் வீரனாகவும், சேனைத் தலைவனாகவும் பொறுப் பேற்கும் இடங்களை எல்லாம் சுட்டிக்காட்டி கம்பனடிப் பொடியார் இலக்குவன் துணைப்பாத்திரத்தை விளக்கக் காணுகின்றோம். இராமனிடம் அடைக்கலம் புகுந்த வீடணனுக்கு ஏற்பட்ட துன்பத்தைப் போக்கத் தானே முன்னின்று துன்பப்பட்டான் இலக்குவன்.

இராமனுடைய புகழுக்கெல்லாம் காரணம் இலக்குவனே என்பதைப் பல நிகழ்ச்சிகள் மூலம் விளக்கிக் காட்டிய கம்பனடிப் பொடியார் உலகெலாம் போற்ற வாழ்ந்து கொண்டிருக்கக் காணுகின்றோம்.

இலக்குவனுக்கு இணை....! என்று வியப்புக் குறியுடன் தலைப்பைக் கொடுத்த கம்பனடிப் பொடியார், இலக்குவனுக்கு இணை அவனேதான்; வேறு யாரையும் குறிப்பிட முடியாது என்கிறார்.

***

## 23. அடியனேன் கண்ட கம்பன்

அடியனேன் கண்ட கம்பன் என்று கம்பனடிப் பொடியார் அமரர் சா. கணேசன் உருவாக்கிய கம்பனை "எந்தை பிரான் கம்பன்" என்ற நூலின் அட்டையில் காணுகின்றோம்.

திருவழுந்தூர், ஸ்ரீரங்கம் ஆகிய இடங்களில் காணப் பெற்ற கம்பன் உருநாட்டாகச் சிற்பங்களைக் கண்டு, அதன் கருத்தோட்டமாக கம்பனடிப் பொடியார் உருவாக்கிய படமே அட்டையில் காணும் கம்பராவார்.

காவிரிக் கரையிலே அந்திப் பொழுதிலே, பசுந்தரையின் பக்கத்தில் மலர்ச்செடிகள் சூழ்ந்த மரத்தினடியில் ஐம்பது

வயதுக்குக் குறையாத கட்டுத் தளராத மேனியை உடைய கம்பர் அமர்ந்திருப்பதைக் காணுகின்றோம்.

அகன்ற நெற்றியையுடையராய், வசீகர முகங் கொண்டவராய், சோழன் போர்த்திய கனகாம்பரமும், சடையன் தந்த நவமாணிக்கக் கண்டிகை அணிந்தவராய், சேரன் அளித்த வயிரக் கடுக்கன், பாண்டியன் இட்ட மோதிரம், வாணன் கொடுத்த கலிங்க நுண்ணுல் ஆடையை உடையவராய்க் கம்பன் காட்சியளிக்கக் காணுகின்றோம். கம்பனின் கற்பனைத் தோற்றத்தை கம்ப சித்திரமாக தூரிகையால் வரைந்து அதன்மூலம் கம்பரை உருவாக்கக் கண்டோம்.

ஆயிரம் ஆண்டுக்கு முன் தோன்றிய கம்பர் சைவரா யிருக்கலாம், அல்லது வைணவராயிருக்கலாம். திட்டவட்டமாக உணரமுடியாத நிலையில் நெற்றியிலே எக்குறி இடுவது?

குறியிடாமல் இருப்பதே உகந்தது என்று எண்ணி கம்பனடி பொடியார் குறியிடாமல் விட்டுவிட்ட நிலையைக் காண்கிறோம்.

எனவே கலைக்கண் கொண்டு நாம் கம்பரை பார்க்கும் வகையில் கம்பர் படத்தை உருவாக்கக் கண்டோம். கம்பரின் தோற்றத்தை உருவாக்கிய அவர் திறத்தைப் போற்றுவோமாக.

***

## 24. மகளிர் கல்வி

விலங்குகளின் அறிவுக்கு மேம்பட்டவர்கள் மக்கள். கல்லாதவர் கற்றவரை விட தாழ்ந்தவரே என்பதைக் கூறவந்த வள்ளுவர்.

"விலங்கொடு மக்களனையர் இலங்குநூல்
கற்றா ரோடேனையவர்",

என்கிறார். எனவே ஒருவன் சிறப்புக்கு கல்வியே காரண மாகும்.

ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான சீவக சிந்தாமணியில் சீவகன் தாயாகிய விசயை கற்றறிந்த பெண்மணி என்பதை திருத்தக்க தேவர் குறிப்பிடுகிறார்.

சங்க காலத்திலே ஔவையார், பொன்முடியார், பாரி மகளிர் காமக்கன்னியார், பூதப்பாண்டியன் தேவி, பெருங்கோப் பெண்டு, மாறபித்தியார், வெண்ணிக் குயத்தியார், மாறோக்கத்து நப்பசலையார் போன்றோர் கல்வி கற்றவர்களாக விளங்கியதை புறநானூற்றின் மூலம் அறிகிறோம்.

பொன்முடியார் என்பவர் அவர் இயற்றிய "ஈன்று புறத்தருதல்" என்ற பாடலின் மூலம் அவருடைய அறிவு நுட்பத்தை அறியமுடிகிறது.

புறநானூற்றில் குதிரையின் படையாற்றலையும், வேந்தர் அளித்த நெய் உணவை உண்ட குதிரைகள் - முருகன் கோயில் கலந்தொடா, மகளிரைப் போல, செருமுகத்தே சும்மா நிற்கிறது, என்று மகளிரின் போர்திறத்தையும் குறிப்பிடக் காணுகின்றோம்.

பாரி மகளிர் தம் தந்தை இறந்த நிலையில் ஒருமாதம் கழித்து வருந்தி பாடிய "அற்றைத்திங்கள்" என்ற பாடல் அம்மகளிரின் அறிவு நுட்பத்தைக் காட்டுகிறது.

அதேபோல கம்பராமாயணத்தில் கோசல நாட்டிலும், அயோத்தி மாநகரிலும் உள்ள ஆண் பெண் இருவருமே கல்வி கற்றவர்களாகத் திகழ்ந்தமையை நகரப் படலத்தில்

> "கல்லாது நிற்பார் பிறரின்மையிற் கல்வி முற்ற
> வல்லாரு மில்லை யவை வல்லரல்லாருமில்லை"

என்ற வரிகளால் அறிகின்றோம்.

அக்காலத்தில் பெண்கள் எல்லோரும் கல்வி கற்றவர்களாய் வாழ்ந்தனர். ''எண்ணெழுத்திகழேல்'' என்பது ஔவை வாக்கு. கம்பராமாயணத்திற்கு முன் சங்க காலத்திலிருந்து தோன்றிய நூல்கள் வாயிலாக மகளிரின் கல்வி எவ்வளவு ஓங்கியிருந்தது என்பதற்கு கம்பனடிப் பொடியார் தந்த எடுத்துக்காட்டுகளைக் கேட்டு வியப் படைகின்றோம். அக்காலத்தில் மகளிரே பெரும்புலமை பெற்றிருந்தனர் என்பதைப் புறநானூற்றின் மூலம் அறிகிறோம்.

நாலடியாரில்

குஞ்சியழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல - நெஞ்சத்து
நல்லம் யாம் என்ற நடுவு நிலைமயாம்
கல்வி யழகே அழகு.

பெண்களுக்கு தலை மயிரழகும், சேலை கட்டும் அழகும், மஞ்சள்பூசி அழகுபடுத்தலும் சிறந்த அழகல்ல. அவர்கள் கல்வி கற்றுத் தேர்ந்திருத்தலே மிக்க பெருமையைக் கொடுத்தது என்று கூறப்படுகிறது.

வள்ளுவரும்

''எண்ணென்ப ஏனைய எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழுமுயிர்க்கு''

என்று கூறுகிறார்.

பண்டைக்காலத்திலிருந்து இக்காலம் வரை மகளிர் கல்வி உயர்ந்து இருந்ததென்பதை கம்பனடிப் பொடியார் ஆய்ந்து தந்துள்ள திறம் போற்றுதற்குரியதாகும்.

***

# 25. சகோதரர்கள்

கம்பராமாயணத்தில் ராமராஜ்யத்தைக் காணுகிறோம். வேறு எங்கும் காணாத சிறப்பு ராமராஜ்யத்தில் அமைந் துள்ளது. உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் சகோதர பாசத்தின் மேன்மையை அங்கு காணுகின்றோம்.

தந்தை தசரதன் - மூன்று பட்ட மகிஷிகள் - நான்கு புத்திரர்கள் இராமன், பரதன், இலக்குவன், சத்துருக்கனன் ஆவார்கள்.

ராமனும் இலக்குவனும் ஒரு கூட்டாளிகள். அவர்கள் உலகத்தாரால் ''ராம இலக்குவர்'' எனப் போற்றப்படு கின்றனர். அதேபோல் பரதனும் சத்துருக்கனனும் இணை பிரியாத ஜோடிகள், அவர்கள் உலகத்தாரால் ''பரத சத்துருக்கனர்'' என்று போற்றப்படுகின்றனர்.

இராமன் காட்டுக்குச்செல்ல வேண்டுமென்பது கைகேகியின் கோரிக்கை இணைபிரியாத இலக்குவனும் உடன்புறப்படுகிறான். கம்பர் காட்டு உவமை அதைவிட உயர்ந்தது. ஒரு பசுவை வெளியே துரத்தினால் அது மட்டுமா ஓடும். உடனிருந்த கன்றும் நிற்காமல் உடன் செல்வதைக் காணுகின்றோம்.

''கன்றும் தாயும் போவன கண்டும் கழியீரே'' - இதனைப் பரதன் வெளிப்படுத்துவதாக கம்பர் குறிப்பிடுவது அருமையிலும் அருமை.

இராமனுக்கும் இலக்குவனுக்கும் உள்ள தொடர்பை, கம்பனும் இலக்குவன் மூலம் வெளிப்படுத்தக் காணுகின்றோம்.

தண்ணீர் இருந்த இடத்தில் மீன் வாழும். தண்ணீர் உள்ள இடத்தில் நீலோற் பல மலர் பூக்கக் காணு கின்றோம். நீரின்றேல் மின் இல்லை. நீரின்றேல்

நீலோற் பல மலரில்லை. அதுபோல இராமனாகிய நீரில், வாழ்பவன் மீனும், நீலோற்பல மலருமாகிய இலக்குவன் ஆவான். இதனை இலக்குவனே கூறுகின்றான்.

நீருள எனின்உ ள மீனும் நீலமும்
அதைப்போல அண்ணா
நானும் சீதையும்
யார் உளர் எனில் உளோம்? அருளுவாய்

இங்குதான் மீன் என்றும், சீதை நீலோற்பல மலர் என்றும் இலக்குவன் கூறி தண்ணீர் இல்லாவிட்டால் மீனும், நீல மலரும் வாழமுடியாது என்று குறிப்பிடுவது போற்றுதற் குரியதாகும்.

அடுத்து இராமனின் உயர்ந்த தன்மையை ஓர் எடுத்துக்காட்டு தந்து கவர வைக்கிறார் கம்பனடிப் பொடியார். காடு உனக்கு, நாடு பரதனுக்கு என்று கைகேயி கூறியபோது, இராமன் கோபப்பட்டானா? இல்லவே இல்லை. அப்பொழுது மலர்ந்த செந்தாமரையைப் போல இராமன் முகமலர்ந்து ''பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றதன்றோ என்று மகிழ்ச்சியுடன் இராமன் கூறுகிறான்.

அடுத்து - பரதனுடைய உயர்ந்த பண்பைக் காட்ட வந்த கம்பனடிப் பொடியார் பல நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டுகிறார். அதில் ஒன்றை மட்டும் பார்ப்போம்.

கோசல நாடு சென்றிருந்த பரதன் அயோத்திக்கு திரும்புகிறான். தாயைக் கண்டான். தந்தையின் மரணத்தைக் கேட்டான். பெருந்துயர் உற்றான். தந்தையைப் பறிகொடுத்த நிலையில்

எந்தையும் யாவும் எம்பிரானும் எம்முளும்
அந்தமில் பெருங்குணத்து ராமன் ஆதலால்
வந்தனை அவன் கழல் வைத்த போதலால்
சிந்தை வெம் கொடுந்துயர் தீர்கலாது

என்கிறான். அண்ணன் இராமனே என் தந்தை, தாயும் அவனே தான். அதோடு மட்டுமல்ல. நான் வழிபடும் கடவுளும் ராமன்தான். ஆகவே அவன் திருவடிகளில் விழுந்து வணங்குவது தான் என் துயரைப் போக்க வழியாகும் என்று பரதன் கூறுவது, அவன் இராமனிடத்தில் கொண்டுள்ள எல்லையில்லாத அன்பைத் தெரிவிக்கிறது. என்னே பரதனின் பக்திப் பெருக்கு.

அடுத்து இராமனிடமும், பரதனிடமும், இலக்குவனிடமும் கொண்ட அன்பைக் கடைசிச் சகோதரன் சத்துருக்கனன் வெளிப்படுத்தும் ஓரிடத்தை கம்பனடிப் பொடியார் சுட்டிக்காட்டுவதை இப்பொழுது பார்ப்போம்.

''பதினான்கு ஆண்டு கழிந்து மறுநாளே வந்து விடுவேன், வந்து ராஜ்யப் பொறுப்பை ஏற்றுக்கொள் கிறேன்'' என்று இராமன் பரதனிடம் கூறினான். ஆனால் அண்ணன் வரவில்லை. எனவே பரதன் நாட்டைத் தம்பி சத்துருக்கனனிடம் ஒப்படைத்து, தீயை வளர்த்து தான் உயிரைப் போக்கிக்கொள்ள எண்ணுகிறான். இதனை சத்துருக்கனனிடமும் பரதன் கூறுகிறான்.

பரதன் கூறியதைக் கேட்ட சத்துருக்கனன் துயரம் ஒருபுறமிருக்க கோபமும் ஆத்திரமும் கொண்டவனாய் உடல்நடுக்கமுடன், உள்ளக்கொதிப்புடன் உணர்ச்சியற்று கீழே விழுகிறான். பின் தள்ளாடியபடியே எழுந்திருக் கிறான். அப்பொழுது கோபத்தின் வேகத்தால், தன் அண்ணன்மார்களிடம் தான் கொண்டிருந்த உள்ளக் கிடக்கையை கொட்டும் விதத்தில் பரதனை நோக்கி

''கானாள நிலமகளைக்
கைவிட்டுப் போனானைக் காத்துப்பின்பு
போனானும் ஒருதம்பி! - போனவன்
தான்வரும் அவதிபோயிற்று'' என்னா

ஆனாத உயிர்விட என்று அமைவானும்
ஒருதம்பி-அயலே, நாணாது
யானாம் இவ்வரசாள் வென்! என்னே
இவ்வரசாட்சி இனிதே அம்மா!''

என்று கதறுகிறான் சத்துருக்கனன்.

''இராமன் நாட்டை விட்டு காட்டையாளச் செல்ல வேண்டிய நிலை அண்ணனுக்கு உதவியாகத் தம்பி இலக்குவன் உடன் சென்று உதவும் நிலை - காட்டிற்கு சென்ற இராமன் குறித்த நாளில் அயோத்தி வர இயலாத நிலை - இதனால் பரதன் தீயை வளர்த்து அதில் புக எண்ணுகின்ற நிலை - இப்படிப்பட்ட நிலையில் அரசாளும் பொறுப்பு சத்துருக்கனாகிய எனக்கா? என்னே அநீதி'' என்று வெந்து புலம்புகிறான் சத்துருக்கனன்.

சத்துருக்கனன் துடித்துப்புலம்பும் நிலையில் அனுமன் வருகின்ற நிலை - ராமராஜ்யம் மிளிர்ந்தது.

என்னே சகோதரர்களுக்கிடையே பிணைப்பு! என்னே! கம்பனடிப்பொடியார் எடுத்தியம்பும் மாண்பு!

கம்பன் கனவு கட்டுரை மூலமாக கம்பனடிப்பொடியார் ஒருநாடு பூலோக சொர்க்கமாகத் திகழ - நாட்டுப் படலம் -நகரப்படலத்தை அமைத்துள்ளார் என்பதை அறிகிறோம். இதனை கம்பனடிப் பொடியார் ஓர் நாடகமாகவே அமைத்திருப்பது அருமையிலும் அருமையாகும்.

***

## 26. கம்பனில் தாவரங்கள்

''கம்பனில் தாவரங்கள்'' என்ற தலைப்பில் கம்பனடிப் பொடியார், இன்றைய நிலையில் தாவர நுட்ப வகைகள், அவற்றின் ஒப்பீடுகள், பற்றி பேராசிரியர் டாக்டர் உ.வே. சுப்பிரமணியன் அவர்களின் மேற்பார்வையில்,

செல்வி மோகன குமாரி எழுதிய வியப்பு மிகு கட்டுரையை மதிப்புரையாகக் கொண்டு கம்பனடிப் பொடியார் விளக்கம் தருவது பாராட்டுதற்குரியதாகும்.

தாவரங்கள் பூக்கும் தாவரம், பூவாத் தாவரம் என்று இருவகைப்படும் பூக்கும் தாவரங்களை இரட்டை விதையிலைத் தாவரம் என்றும், ஒற்றை விதையிலைத் தாவரம் என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். பூக்கும் தாவரங்களை இரட்டை விதையிலைத் தாவரம் என்றும், ஒற்றை விதையிலைத்தாவரம் என்று இருபிரிவுகளாகப் பிரிக்கலாம். பூவாத் தாவரங்கள் பாசி, காளான் என இரு பிரிவாகப் பிரிக்கலாம் என்று, எம்.ஏ. படித்த மாணவி கி. மோகனகுமாரியின் முன்னுரையோடு கம்பனடிப் பொடியார் கட்டுரையை ஆரம்பிக்கிறார்.

காந்தள் பூவினை மலையாள மக்கள் தோன்றிப் பூ என்று கூறுகின்றனர். அதனைத் தங்கள் பகுதியில் கார்த்திகைப் பூ என்று கூறுவதாகக் கம்பனடிப் பொடியார் குறிப்பிடுவது அவரது ஆராய்ச்சித் திறனை வெளிப் படுத்துகிறார்.

கம்பர் புகழ் எல்லா உலகத்திலும் பரவியுள்ளது. அவர் கல்லாத கலைகளே இல்லை. அவர் ஓர் வேதக் கடல் என்று கம்பரைக் கூறி, கம்பரில் தாவர நுணுக்கங் களை இக்கட்டுரையில் ஆய்ந்து கூறுகிறார் கம்பனடிப் பொடியார். கம்பராமாயணம் பால காண்டத்தில்'' செறி அகில் தேய்வையும்'' என்ற சொற்றொடரினுக்கு விளக்கம் தருகிறார் கம்பனடிப்பொடியார். அகில் இருவகைப்படும். காரகில், வெள்ளகில் என்ற இருவகையில் அரைக்க மணம் தருவதும், குங்குமப்பூ கலக்கப்பெறுவதுமான அகில்'' நறுங்குங்குமம் செறி அகில் தேய்வு என்று கம்பர் குறிப்பிடுவதை ஆய்ந்து கூறுகிறார் கம்பனடிப் பொடியார்.

கம்பராமாயணத்தில் 1. காவியும், கருங்குவளையும் 2) நெய்தலும், 3. காயாம் பூவையும் பொருவுவானவன் 4) படர்பூங்குவளை நாண்மலரோ 5) நீலோற்பலமோ, பான்லோ'' என்ற வரிகளை நோக்கும்போது, அவ்வரிகளில் கூறப்படும் காவி, கருங்குவளை, நெய்தல், காயாம்பூ, நீலோற்பலம், பானல் என்பவை வெவ்வேறு மலர்கள் என்று கம்பர் குறிப்பிடுகிறார். எனினும் உரையாசிரி யர்கள் அத்தனை பெயரும் ஒரு மலரைக் குறிப்பன என்ற குறிப்பிடுகிறார்கள். எனினும் ''சங்க இலக்கியங்களில் செடி, கொடி, விளக்கம்'' என்ற ஆய்வு நூலை ஆக்கிய திரு. சாமியின் கருத்தை நோக்கும்போது அவைகள் வெவ்வேறு மலர்களே என்று கம்பனடிப்பொடியார் கூறுவது வரவேற்கத்தக்கதாகும்.

மற்றோர் இடத்தில் குறிப்பிடப்படும்

''மேதிக் குழி எலாம் கழுநீர்க்கொள்ளை''

என்ற வரியில் கூறப்படும் கழுநீர் என்ற மலர் அல்லி இனத்தைச் சார்ந்ததாகும். இன்றும் திருவாரூர் போன்ற கோயில்களில் நாள்தோறும் பயன்படுத்தப்படுகிறது. அது ஊதா விரவிய நீலநிறம் உடையது. அது மூன்றடி ஆழத்திற்குக் உட்பட்ட சேற்றுப் பாங்கான குட்டைகளில் வளர்வதாகும். மேதிக்குழி என்ற கம்பனடிப் பொடியார் குறிப்பிடுவது அவரது ஆய்வுத்திறனை எடுத்துக் காட்டுகிறது.

காவி என்பது கருங்குவளை மலரைக் குறிக்கும் மாணிக்கவாசகர் திருவாசகத்தில் இதனை ''பைங்குவளைக் கார் மலர்'' என்று குறிப்பிடுகிறார்

நெய்தல் என்பது பெரும்பாலும் கடற்கரைப் பகுதியில் காணப்படும் கருநீல மலரைக் குறிப்பதாகும். பானல் என்ற மலர் மருதநிலப் பகுதியில் வாய்க்கால்களிலும் குளக்கரைகளிலும் காணப்படுவதாகும்.

''காயாம் பூவையும் பொருவுவானவன்'' என்று இராமபிரான் மேனிக்கு காயாம்பூவை ஒப்பிட்டுக் கம்பர் குறிப்பிட்டுள்ளார்.

நொச்சி என்பதும் சிந்துவாரம் என்ற தாவரமும் ஒன்றே என்பர் சிலர். இரண்டும் வேறுபட்டது என்பர் பலர். ஆராய்ச்சி முடிவில் இரண்டும் வேறுபட்டது என்பதே முடிவாக ஏற்கிறோம். இந்த ஆராய்ச்சியைப் படிக்கும் போது நமக்கு திகைப்பும் மலைப்பும் அடைகிறோம்.

புன்னை என்பதும் சுரபுன்னை என்பதும் வேறுபட்ட மரங்களாகும். அதேபோல நாகம் என்பதும் சுரபுன்னை என்பதும் வேறுபட்டதாகும். இதுவும் ஓர் ஆராய்ச்சி பலகுழப்பதினின்றும் நம்மனம் தெளிவடைகிறது. நிலத்தில் படரும் வள்ளிக் கொடியைக் கம்பர் மரத்தில் சுற்றி வளர்வதாகக் காட்டுக்கிறார். இதனைக் குறிப்பிடும்போது ''வள்ளியுடை சுற்றி உயர்மரம்'' என்று கம்பர் காட்டுகிறார்.

கம்பர் குறிப்பிடும் வள்ளி என்பது பூங்கொடி யாகும். அது வள்ளிக் கிழங்குக் கொடியை குறிக்காது என்பது ஓர் ஆராய்ச்சி. கம்பர் குறிப்பிடும் வள்ளிக் கொடி, வள்ளிக் கிழங்குக் கொடியைக் குறிக்காது என்பதே முடிவாக உள்ளது. இந்த ஆராய்ச்சி பெரும் வியப்பை யூட்டுகிறது.

வள்ளிக்கொடி வேறு - சர்க்கரை வள்ளிக்கிழங்கு வேறு.

சர்க்கரை வள்ளிக் கிழங்கின் தோல் சிவப்பாகவும் இருக்கும். வெண்மையாகவும் இருக்கும். இதனைச் சீனிக்கிழங்கு என்று கூறுவர். இதைத்தவிர மரவள்ளிக் கிழங்கும் மற்றொரு வகையாகும். அதனை ஏழிலை வள்ளி, குச்சிக்கிழங்கு என்றும் குறிப்பிடுவர். இதைத் தவிர சிறுவள்ளி, நீர்வள்ளி என்ற கிழங்குவகைத் தாவரங்களும் உண்டு.

இப்படித் தாவரங்களை நுணுகி ஆய்ந்து வெளிப் படுத்தும் கம்பனடிப்பொடியாரின் திறத்தைப் போற்று வோமாக.

***

## 27. கம்பன் - அருளிய இராமாவதாரத்தின் யாப்பு - சந்த வேறுபாடுகள்

கம்பர் இயற்றிய இராமாவதாரத்தில் உள்ள ஆறு காண்டங்களிலும் உள்ள 9972 விருத்தப்பாடல்கள் ஒவ்வொன்றிலும் உட்புகுந்து கம்பனடிப்பொடியார் நுணுகி, யாப்பு, சந்தவேறுபாடுகளை நமக்குத் தொகுத்துக் கொடுத்துள்ளார். அதனை கம்பர் பித்தன் எஸ்.என். குப்புசாமி முதலியார் அச்சிட்ட 28 பக்கங் களில் அட்டவணையிட்டு விரிவாக வாசகர்கள் அறியத் தந்துள்ளார்.

இரண்டு சீர்கள் வரக்கூடிய குறளடி நான்கு, சிந்தடி நான்கு கொண்ட செய்யுட்களை அறிந்து, அவைகளை வஞ்சித்தாழிசை, வஞ்சி விருத்தம், வஞ்சித்துறை என்ற சந்த விருத்தப்பாகுபாடுகளுக்கு ஏற்பப் பிரித்து பட்டியல் தயாரித்துக் கொடுத்துள்ளார். அதோடு மட்டுமல்ல எழுத்துக்களையும் எண்ணி, அவைகளின் அமைப்பை பட்டியலிட்டுத் தந்துள்ளார்.

அதேபோல் ஈரசைச்சீர் மூன்று கொண்ட சிந்தடி, அளவடிகளை வகைப்படுத்தி நான்கடிகள் கொண்ட வஞ்சி விருத்தப் பாடல்களையும், கட்டளைக் கலிப்பாப் பாடல்களையும் இவை இவை என்று அறிந்து காண்டம் - படலம் வாரியாகப் பட்டியலிட்டுத் தந்துள்ளார்.

இதேபோல நான்கு சீர்கள் நான்கடிகள் கொண்ட அளவடி நான்குடைய கட்டளைக் கலிப்பா, அளவடி நான்கு கொண்ட அளவியல் சந்தக்கலிவிருத்தம், அளவடி நான்கு கொண்ட தரவு கொச்சகப்பாக்களை தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் சீர்களை இலக்கணப்படி பகுத்தாய்ந்தும், குறிஞ்சி வண்ண இராகத்தையும் துருவியறிந்து காண்டம் - படலம் வாரியாகக் கம்பனடிப் பொடியார் பாடல்களைத் தொகுத்துத் தந்துள்ளார்.

இதேபோல, சீர்கள் ஐந்துகொண்ட நெடிலடி நான்குடைய அளவியல் கலித்துறை, அளவியல் சந்தக் கலித்துறைப் பாக்களையும் அடுத்து அதேபோல் அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம், எழுசீர்க்கழி நெடில்டி ஆசிரிய விருத்தம், எழுசீர்க்கழி நெடிவடி ஆசிரிய விருத்தம், எழுசீர்க்கழி நெடிலடி சந்த விருத்தம் பாடல்களையும், அடுத்து எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தப் பாக்களையும் அறிந்து காண்டம் - படலம் வாரியாகப் பிரித்துத் தொகுத்துப் பட்டியலிட்டுத் தந்துள்ளார்.

உடனடியாக நாம் அறியும் வகையில் விருத்தப் பாக்களில் அமைந்த 9972 பாடல்களையும் காண்டம் - படலம் வாரியாகத் தனித்துத் தந்த பட்டியலைக் கீழே காண்போம்.

| பாடல் பிரிவுகள் | பால காண்டம் | அயோத்தியா காண்டம் | ஆரண்ய காண்டம் | கிஷ்கிந்தா காண்டம் | சுந்தர காண்டம் | யுத்த காண்டம் | மொத்தப் பாடல்கள் |
|---|---|---|---|---|---|---|---|
| 1. இருசீர்கள் கொண்ட பாக்கம் | - | - | 10 | - | 4 | - | 14 |
| 2. மூன்று சீர்கள் கொண்ட பாக்கள் | - | - | - | - | 28 | 91 | 119 |
| 3. நான்கு சீர்கள் கொண்ட பாக்கள் | 813 | 736 | 693 | 578 | 525 | 1636 | 4981 |
| 4. ஐந்து சீர்கள் கொண்ட பாக்கள் | 88 | 243 | 200 | 156 | 266 | 744 | 1697 |
| 5. ஆறு சீர்கள் கொண்ட பாக்கள் | 301 | 189 | 272 | 280 | 400 | 1532 | 2974 |
| 6. ஏழு சீர்கள் கொண்ட பாக்கள் | 34 | 18 | 7 | 12 | 35 | 75 | 181 |
| 7. எட்டுசீர்கள் கொண்ட பாக்கள் | - | - | 6 | - | - | - | 6 |
| மொத்த விருத்தப் பாடல்கள் | 1236 | 1186 | 1188 | 1026 | 1258 | 4078 | 9972 |

மேற்கண்ட பட்டியலின்படி 9972 விருத்தப்பாடல் களை காண்டம் - படலம் வாரியாக கம்பனடிப் பொடியார், கம்பரின் இராமாவதாரப் பாடல்களைத் தொகுத்துத் தந்துள்ளார்.

''விருத்தம் என்றும் ஒண்பாவிற்கு உயர் கம்பன்'' என்று பாராட்டப் பெற்ற, கம்பரின் நுட்ப அறிவுத் திறத்தை, நாம் அறியும்படி கம்பனடிப் பொடியார் இக்கட்டுரையில் வாசகர்களுக்குத் தந்துள்ளார். அவரின் ஆய்ந்த புலமையை வெளிப்படுத்தி கம்பர் பித்தன் எஸ்.என். குப்புசாமி முதலியார் நூல்வடிவத்திலேயே வெளியுலகத்திற்கு அறியச் செய்துள்ளார். மூவரின் அறிவாற்றலை உலகம் அறிந்து வியக்கக் காணுகின்றோம்.

***

# கம்பன் படைத்த மண்டோதரியின் மாண்புகள்

## 1. முன்னுரை

**அ. கற்பின் மூவகை**

சங்ககாலப் புலவர்கள் மகளிர்க்குரிய கற்பினை மூவகை என இயம்பியுள்ளனர். கணவன் இறந்ததும், அதைக் கேள்விப்பட்ட நிலையில் மனைவி உடனே உயிர் விடுதல். இது தலையாய கற்பு எனப்படும். அப்படி இறந்தவள்தான் மண்டோதரி ஆவாள்.

கணவன் இறந்ததும், அவனுக்காகச் செய்ய வேண்டிய பணிகளைச் செய்து முடித்துவிட்டு தன்னுயிரையும் போக்குதல் இரண்டாம் வகையாகும். தீயை வளர்த்து உடன்கட்டை ஏறுதல் இவ்வகையைச் சார்ந்ததாகும். இது இடையாய கற்பு ஆகும்.

கணவன் இறந்ததும் அவனுக்காகச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களைச் செய்வதோடு, கைம்மை நோன்பு நோற்று வாழ்பவர் மூன்றாம் வகைக் கற்பினைச் சார்ந்த வர்கள். இது உத்தம கற்பு எனப்படும்.

கணவன் இறந்ததும், தன் உயிரை விட்ட தலையாய கற்புக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்பவள் மண்டோதரி ஆவாள். தென்னிலங்கைத் தெய்வமான இராவணனின் மனைவி தான் மண்டோதரி ஆவாள்.

### திருவாசகத்தில் மண்டோதரி

மண்டோதரியின் ஒப்பற்ற கற்பை விளக்க வந்த மாணிக்கவாசகர் தான் இயற்றிய திருவாசகத்தின் ஒரு பகுதியாகிய குயிற்பத்தில் குறிப்பிடக் காணுகின்றோம்.

பெருந்துறை வள்ளலும், மண்டோதரிக்கு சிவகதி கொடுத்த தென்பாண்டி நாட்டானுமாகிய சிவனின் பண்பைக் குயிலே! நீ எங்கும் சென்று கூவுவாயாக! என்று மாணிக்கவாசகர் தாம் இயற்றிய திருவாசகத்தில் குயிற்பத்து என்ற பிரிவில்

> ''ஏர்தரும் ஏழுலகேத்த எவ்வுருவும் தன்னுருவாய்
> ஆர்கலி சூழ் தென்னிலங்கை அழகமர் வண்டோதரிக்குப்
> பேரருள் இன்பமளித்த பெருந்துறை மேயபிரானைச்
> சீரிய வாயாற் குயிலே தென்பாண்டி நாடனைக்
> கூவாய்''

குயிற்பத்து - 2

என்று மண்டோதரியின் சிவ பக்தியை எடுத்துக்கூறக் காணுகின்றோம். இங்கு மண்டோதரியை, வண்டோதரி என்று மாணிக்கவாசகர் குறிப்பிடுகிறார். அதோடு மட்டுமல்ல மண்டோதரிக்கு பேரருள் இன்பமாகிய சிவகதியை கொடுத்தவர் சிவனே என்பதை வலியுறுத்த தென்பாண்டி நாட்டான் என்று குறிப்பிடுவது போற்றுதற்குரியதாகும்.

### அனுமன் கண்ட மண்டோதரி

அனுமன் இலங்கையில் சீதையைத் தேடும்போது மயன் மகள் உறைமாடம் அடைந்தான். அம்மாடத்தைச் சுற்றிக் கண்ணொடுங் கருத்தொடும் பறந்து சென்று அங்கு உறங்கிய நங்கையின் பாதங்களை அரம்பை, மேனகை, திலோத்தமை, ஊர்வசி முதலியோர் வருடிக்கொண்டிருந்தர். பக்கத்தில் சிலர் யாழ் மீட்டிப் பண் இசைத்துக் கொண்டிருந் தனர். அங்கு மலர்மணம் வீசிக் கொண்டிருந்தது.

''அரம்பை, மேனகை திலோத்தமை உருப்பசி
ஆதியர், மலர்க்காமன்
சரம்பெய் தூணிபோல் தளிர்அடி தாம்தொட
சாமரை பணிமாற
கரும்பையும் சுவை கைப்பித்த
காமரம் கனியாழின் சொல்லியர்
நரம்பின் இன்னிசை செவிபுக நாசியில்
கற்பக விரைநாற''

இரத்தினமயமாய் ஒளி வீசுகின்ற விளக்குகளின் வெளிச்சமும் கெடும்படியாக அதிகமான பிரகாசத்தை உடைய இனிய உடலை உடையவள் மண்டோதரி ஆவாள். அவள் தூங்கிக் கொண்டிருக்கும் காட்சியைக் கண்டான் அனுமன். முதலில் சீதை என்று எண்ணிய அனுமன், உடல் நிற மாற்றத்தால் அவள் இராவணன் மனைவி மண்டோதரி என்று உறுதிபடுத்திக் கொண்டான்.

இப்படி மலர்மணம் எங்கும் பரவ, யாழிசை கேட்க, அரம்பை, மேனகை, திலோத்தமை, ஊர்வசி பணி செய்ய மண்டோதரி தூங்கிக் கொண்டிருப்பதை அனுமன் கண்டான் என்று கம்பர் குறிப்பிடுகிறார்.

### ஈ. இராவணனும் மண்டோதரியும்

இராவணன் இல்லற வாழ்க்கையைக் குறிப்பிடும் போது மனைவியர், மக்களோடு இன்ப வாழ்க்கை நடத்தியவன் என்பதை அறிகிறோம். இராவணன் மனைவி மண்டோதரியின் வயிற்றில் பிறந்தவர்கள் இந்திரசித்தும், அக்ககுமாரனும் ஆவார்கள். இராவணனுக்கும் தானிய மாலினிக்கும் பிறந்தவன் அதிகாயன் ஆவான், மற்றும் தேவராந்தகன், நராந்தகன், திரிசிரா என்பவர்கள் இராணவனுடைய மகன்கள் என்றும், அவர்கள் ஈன்றதாய் யார் என்பதை அறிய முடியவில்லை. பலதார மணம் அக்காலத்தில் குற்றமில்லாததாகக் கருதப்பட்ட காலமாகும்.

இராவணன் இறப்பதற்கு முக்கிய காரணம் இராவணனுடைய தங்கை சூர்ப்பணகையாவாள். அவள் தீட்டிய திட்டத்தில் வீழ்ந்து தன் முடிவை தேடிக் கொண்டான் இராவணன் என்று மண்டோதரி குறிப்பிடுவதை அறிகிறேன்.

இறுதிப் போருக்காகத் தேர் ஏறும்போது இராவணன் ஓர் சவால் விட்டுத் தேர் ஏறக் காணுகிறோம்.

ஒன்று அழகிய கூந்தலையுடைய சீதை (நான் இராமனைக் கொல்வதால்) மீளா துயரில் ஆழ வேண்டும். அல்லது (இரண்டாவது) மயன் மகளாகிய என் மனைவி மண்டோதரி, நான் போரில் இறந்தால் ஆழாத்துயரில் ஆழ்ந்து விடவேண்டும்.

''மன்றல் அம்குழல் சனகி தன்மலர்க் கையால் வயிறு
கொன்று அலந்தலைக் கொடு நெடுந்துயரிடைக்
குளித்தல்
அன்று இதுஎன்றிடின் மயன்மகள் அத்தொழில்
உறுதல்;
இன்று இரண்டில் ஒன்று ஆக்குவென் தலைப்படின்''
என்றான்.

சீதை நெடுந்துயரிடைக்குளித்தல் வேண்டும். அல்லது மண்டோதரி இன்னலால் வருந்த வேண்டும். இரண்டில் ஒன்று இன்று நிகழப்போகிறது என்று கூறி இராவணன் தேரில் ஏறினான்.

இராவணன் கூறிய மேற்கண்ட சபதத்தைக் கேட்ட தேவ மகளிர் எல்லாம் நடுங்கினர்.

***

# உ. அக்ககுமாரன் வதைப்படலத்தில் மண்டோதரி

### அ. அனுமன் அக்ககுமாரனை வதைத்தல்

கம்ப ராமாயணத்தில் சுந்தர காண்டத்தில், 10-வது அக்ககுமாரன் வதைப்படலம் ஆகும். அக்கன் என்றால் அழிவு இல்லாதவன் என்று பொருள்படும். மண்டோதரிக்கும் இராவணனுக்கும் பிறந்த இளைய மகன்.

அசோகவனத்தில் சீதையைக் கண்டு, சூளாமணியை அடையாளமாகப் பெற்று திரும்ப எண்ணிய அனுமன், தன் வல்லமையைக் காட்டி இராவணனை அழித்துச் சீதையை அழைத்துச்செல்ல வேண்டுமென்று எண்ணுகிறான். எனவே அசோக வனத்தை அழித்தான் அனுமன். அரக்கி யர்கள் கூக்குரலிட, இராவணனுக்குச் செய்தி எட்டியது. கிங்கரர்களை அனுப்பினான் இராவணன். அவர்களை அழித்தான் அனுமன். சம்புமாலி என்ற படைவீரனைச் சேனையோடு இராவணன் அனுப்பினான். அவர்களையும் அனுமன் அழித்து, பஞ்ச சேனாதிபதிகளையும் அழித்தான்.

இராவணன் வெகுண்டான். இந்நிலையில் அவனுடைய இளைய மகனான (இராவணனுக்கும், மண்டோதரிக்கும் பிறந்த இளைய மகன்) அக்ககுமாரனை அனுப்பினான்.

தன்னை எதிர்த்து வந்த அக்ககுமாரனை அனுமன் தன் வாலினால் சுருட்டித் தூக்கி எறிந்து அவன் முதுகின் மீது அமர்ந்தான். பின் அனுமன் அக்ககுமாரனின் வாயைத் தன் கரங்களால் தாக்க பற்களெல்லாம் உடைந்தன. காதிலுள்ள குண்டலங்கள் அறுந்து வீழ்ந்தன. பின் அக்ககுமாரனின் வயிற்றிலும் குத்தக் குடல்பகுதி வெளியே தொங்கின. மேலும் அனுமன் தன் கைகளால் அக்ககுமாரனின்

பிடரியைத் தாக்க, அலறினான் அக்ககுமாரன். அதோடு மட்டுமல்ல அக்ககுமாரனது உடலை மண்ணோடு மண்ணாக தேய்த்துக்கொன்றான். அவ்வளவில் அக்ககுமாரன் உயிரிழந்தான்.

இளைய மகனாகிய அக்ககுமாரன் இறந்த செய்தியைக் கேள்விப்பட்ட மண்டோதரி போர்க்களத்தை நோக்கி ஓடிவந்தாள்.

ஆ. வயிற்றில் அடித்துக்கொண்டு மண்டோதரி அலறிப் புலம்புதல்

''கயல்மகிழ், கண்இணை கலுழி கான்றுஉக,
புயல்மகிழ், புரிகுழல் பொடி அளாவுற,
அயன்மகன், மகன்மகன் அடியின் வீழ்ந்தனள்
மயன்மகள், வயிறு அலைத்து
அலறிமாழ்டகினாள்''

அ.கு.வ.48

| | | |
|---|---|---|
| கயல் | - | கெண்டை மீன் |
| கலுழி கான்று உக | - | கண்ணீர் சிந்தி அழுதல் |
| புயல் | - | மேகம் |
| பொடி அளாவுற | - | மண்புழுதியில் புரள |
| அயன்மகன் | - | பிரம்மன் மகன் |
| மயன்மகன் | - | அசுரத்தச்சன் மகள் |

பாடல் கருத்து

அக்ககுமாரன் இறந்த செய்தியைக் கேள்விப்பட்ட அசுரத்தச்சன் மயனின் மகளான மண்டோதரி, கெண்டை மீன் போன்ற தன் இரண்டு கண்களும் கண்ணீர் சிந்தி, மேகம் போன்ற கருமையான கூந்தல் தொகுதி மண்ணில் கிடந்து புரள, பிரம்மன் மகனாள புலத்தியனின் மகனாள விச்சிரவசுவின் மகனான இராவணனின் பாதங்களில்

வந்து விழுந்தான். தன் வயிற்றில் கரங்களால் அடித்துக் கொண்டே பலவாறு கூறி அழுது புலம்பினாள் மண்டோதரி.

இவ்வாறு அக்ககுமாரன் வதைப்படலத்தில் மண்டோதரி ஒரு பாடலில் காட்சி தந்து அழுது புலம்பக் காணுகின்றோம். அக்கண் என்பதற்கு அழிவில்லாதவன் என்று பொருளிருந்தாலும் அனுமனால் அழிக்கப்படும் குமாரனாக பின்னால் திகழ்வதைக் காணுகின்றோம்.

***

# 3. இந்திரசித் இறத்தலும் மண்டோதரி புலம்பலும்

## அ. இந்திரசித்தின் இறந்த உடலைக் கண்ட மனைவியர்கள் அலறி உயிர்விடும் நிலை

இராவணன் சோகப் படலத்தில், மிக்க துயரால் வாடிய இராவணன் தன் மகன் இந்திரசித்துவின் தலையைக் காண முடியாத நிலையில் உடலை மட்டும் தேரிலேற்றி அரண்மனைக்குக் கொண்டு வந்து சேர்ந்தான். கந்தருவர், இயக்கர், சித்தர், அரக்கர் குலத்தைச் சார்ந்த இந்திரசித்தின் மனைவியர்கள் எல்லாம் பெருந்துயருடன் அழுதநிலையில் கண்களைக் குத்திக் கொண்டும், கழுத்தை வாளால் வெட்டியும், கத்தியால் வயிற்றைக் கிழித்தும் ஈரலைப் போக்கியும் உயிரை விட்டனர். மக்கள் துயரத்தால் அழுத கண்ணீர் தெருவெங்கும் பெருக்கெடுத்து ஓடியது.

## ஆ. மகன் இறந்த செய்தியை அறிந்த மண்டோதரி ஓடி வந்து உடலில் விழும் நிலை

அப்போது மயன் எனும் அசுர சிற்பியின் மகளும், இராவணனுடைய மனைவியுமான மண்டோதரி கருமையான நீண்ட கூந்தல் தன் பாதத்தைத் தொடவும், தாமரை

மலர் போன்ற கரங்களால் தென்னை இளங்காய் போன்ற தனங்கள் இரண்டும் புடைத்திருக்க, தன் மார்பின் மீது கரங்களால் அடித்துக்கொண்டே ஓடிவந்தாள்.

மண்டோதரிக்கு பெருமை கொடுக்கும் நீண்ட கூந்தலும், அகன்ற அல்குலும் இப்பொழுது துன்பம் தருவனவாய் சுமையாக இருந்தன என்று கம்பர் குறிப்பிடுகிறார். இடையும் அவளுக்கு உண்டோ? என்று ஐயுறும்படி அல்குல்கள் கலக்கமடைந்தன என்று ஆசிரியர் கூறக் கேட்கின்றோம்.

மண்டோதரி தலையின் மீது தாங்கிய கையை உடையவளாய், நெருப்பின் மீது காலை வைத்துள்ளது போல் பயத்துடன் பூமியின் மீது கால்களைப் பதித்தவளாய் இறந்து கிடந்த இந்திரசித்தின் உடலைக் கண்டாள். அவள் தன் மகன் உடலின் மீது விழுந்த நிலையைக் கூறவந்த கம்பர்

"கொலையின் மேற் குறித்த வேடன் கூர்ங்கணை
உயிரைக் கொள்ள
மலையின் மேல் மயில் வீழ்ந்தென்ன மைந்தன்
மேல் மறுகி வீழ்ந்தாள்"
இரா.சோ. 45

ஏக்கம் நிறைந்த நெஞ்சினை உடைய மண்டோதரி, வேடன் ஒருவனின் அம்பால் தாக்கப்பட்ட மயில் ஒன்று மலை ஒன்றின் மீது விழுந்ததைப் போல இறந்த இந்திரசித்தின் உடலின் மீது விழுந்தாள்.

### இ. மண்டோதரி மகன் உடலில் விழுந்து புலம்பல்

இந்திரசித்தின் தலையற்ற உடலின் மீது விழுந்த மண்டோதரி நெடுநேரம் மூச்சின்றிக் கிடந்தாள். பின் மெல்ல அயர்வு நீங்கி, வாய்திறந்து புலம்பலுற்றாள். அவள் புலம்புதலை ஏழு பாடல்களில் கம்பர் வர்ணிக்கிறார்.

மகனே! சந்திரன் கலைகள் நாளுக்கு நாள் வளர்வது போல, இளமைப் பருவத்தில் வளர்ந்து, வில்தொழிலில் தேர்ச்சி பெற்று இந்திரனை வெற்றி கொண்டாய். இப்பொழுது தலையற்ற உன் உடலைக் காணுகின்றேன்! என்ன பாவம் செய்தேனோ? உன்நிலையில்லா வாழ்வைக் கண்டும் உயிர்விடாது என் உயிரைத் தாங்கிக் கொண்டிருக் கிறேனே! இது சரியா?

**ஈ. நின்முகத்தைக் காணாது துடிக்கிறேன். இது தகுமா?**

"ஐயனே! அழகனே! என் அரும்பெறல் அழிந்தே! ஆழிக்
கையனே! மழுவனே! என்று இவர் வலிகடந்த கால
மெய்யனே! முளரியன்ன நின்முகம் கண்டிலாதேன்?
உய்வனோ! உலகம் மூன்றுக்கு ஒருவனே! செருவலோனே!"

இரா.சோ. 48

மழுவனே - மழுப்படையை உடைய சிவனே
முளரி - தாமரை

**பாடல் கருத்து**

உலகம் மூன்றிற்கும் ஒப்பற்ற வீரனாய்த் திகழ்கின்ற, உன் தாமரை மலர் போன்ற மலர்ந்த முகத்தைக் கண்ட பின்னும் உயிரை விடாது இருக்கிறேனே! இது தகுமா?

**உ. மகனே! இளவயதில் நீ செய்த விளையாட்டை இனி காண்பேனா?**

மைந்தனே! உன் கால்களில் சதங்கை ஒலிக்க, நின் விளையாட்டுப்பருவத்தில், இரண்டு சிங்கக்குட்டிகளை கொண்டு வந்து முற்றத்தில் நீ விளையாடச் செய்தாய்! அத்தகைய விளையாட்டை இனிக் காண்பேனா?

**ஊ. மகனே! நீ சந்திரனோடு விளையாடுவதை இனிக் காண்பேனா?**

ஆண் யானை போன்றவனே! நீ குழந்தைப் பருவத்தில் சந்திரனை வா! என்று அழைத்தாய்! சந்திரனும் இவ்வுலகத்திற்கு வந்தான்! அப்போது உன்னிடத்திலுள்ள முயல்கறையை நீக்குகிறேன் என்று நீ கூறி சந்திரனுக்கு ஆறுதல் கூறினாய்! நீ இப்பொழுது எழுந்து அச்செயலைச் செய்வாயாக!

**எ. மைந்தனே! உன் மனைவிமார்கள் மயக்கியதால் இந்நிலை உனக்கு ஏற்பட்டதோ?**

"என் மைந்தனே! உன் மனைவியர்களாகிய இயக்கர், அரக்கர், வித்யாதரர் குலத்தைச் சேர்ந்தவர்கள் எல்லாம் களங்கமில்லாத சந்திரனைப் போன்ற அழகுடையவர்கள். உன் மனைவிமார்கள் எல்லாம் உன்னை வயப்படுத்தி மயக்கிய காரணத்தால் இப்பொழுது நீ மலர்ப்படுக்கையில் அயர்ந்து உறங்குகின்றாயோ? அல்லது நீ வீரத்துடன் போர் செய்த களைப்புத்தீர உறங்குகிறாயா? சொல்வாயாக!" என்றாள்.

**ஏ. மகனே! நீ சிவபெருமானிடம் படைக்கலன்கள் பெற்றும் பயன் இல்லையே!**

"முக்கணான் முதலினோரை உலகு ஒரு மூன்றினோடும்
புக்க போர்எல்லாம் வென்று நின்ற என் புதல்வன்
போலாம்
மக்களில் ஒருவன் கொல்ல மாள்பவன் வான மேரு
உக்கிட அணுவொன்று ஒடி உதைத்தது போலும்
அம்மா"

இரா.சோ. 52

மகனே நீ மூன்று உலகங்களிலும் சென்று, மூன்று கண்களையுடைய சிவபெருமானையும் மற்றவர்களையும்

வென்றாய்! அப்படிப்பட்ட உன்னை மக்களில் ஒருவன்கொன்று விட்டானே! இச்செயல் எப்படி உள்ளது என்றால், பெருமை மிக்க மேருமலையை ஒரு அணுவானது ஓடிச்சென்று உதைத்தது போன்றதாகும். இது என்ன வியப்போ? எனக்குத் தெரியவில்லையே! தவம் செய்து சிவபெருமானிடம் வலிமை மிகுந்த படைக்கலன்களையும் பெற்றுப் பயனில்லையே!

**ஐ. மகனே! இனி நடக்கப்போகும் போரில் என் கணவனும் இறந்து விடுவானோ? ஐயோ? அஞ்சுகிறேன்.**

இவ்வாறு மண்டோதரி அழுது புலம்புகையில், இதுவரை செய்த போர்களில் நடந்த நிகழ்ச்சியையும், இனி நடக்கப்போகும் நிகழ்ச்சியையும் பின்வரும் பாடலிலே அழுது புலம்பக் காணுகின்றோம்.

> "பஞ்செரி யுற்றது என்ன அரக்கர் தம்பரவை எல்லாம்
> வெஞ்சின மனிதர் கொல்ல விளிந்ததே மீண்ட தில்லை!
> அஞ்சினேன்! அஞ்சினேன்! அச் சீதை என்று
> அமிழ்தில் தோய்த்த
> நஞ்சினால் இலங்கை வேந்தன் நாளை இத்தகையன்
> அன்றோ!"
>
> இரா.சோக. 53

"மகனே! பஞ்சிலே நெருப்புப் பொறி பற்றினால் முழுவதும் அழிதல் திண்ணம். அதுபோல, இராமலக்குவன் போர்த் திறத்தால் இதுவரை சென்று போரிட்ட அரக்கர் சேனை வெள்ளம் அனைத்தும் அழிந்து விட்டன. போருக்குச் சென்ற அரக்கர்கள் எவரும் உயிருடன் திரும்பவில்லை. இலங்கை வேந்தனான (என் கனவனான) இராவணனும் நாளை நடக்கும் போரில், சீதை என்கிற அமிழ்தம் தோய்க்கப் பெற்ற நஞ்சினால் அழியப் போகிறான் அல்லவா! இதனை எண்ணி அஞ்சுகிறேன்! அஞ்சுகிறேன்!".

மேற்கண்ட பாடலில் அமிழ்தம் தோய்ந்த நஞ்சுதான் சீதையாவாள். அந்த நஞ்சே, நாளை இராவணனையும் அழிக்கப்போகிறது என்று மண்டோதரி திட்டவட்டமாகக் கூறிப் புலம்புவதை நாம் அறிகிறோம்.

"எனைத் துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல்''

குறள்:144

கருத்து

சிறிதளவும் தமது குற்றத்தை ஆராயாமல், பிறருடைய மனைவியைக் கவர்ந்தால், எவ்வளவு பெருமை உடையவரும் இழிவடைவர். இதனை அறிவாயாக!

மேற்கண்ட பாடலில் சீதையைக் கவர்ந்து வந்த, தன் கணவனான இராவணன் அடுத்துப் போரிலே இறக்கப்போகிறான் என்பதை மண்டோதரி புலம்பலிலே வலியுறுத்திக் கூறுவதை அறிகிறோம்.

ஒ. முடிவுரை

இவ்வாறு மண்டோதரி கடைசியாகக் கூறும் செய்தியைக் கேட்ட இராவணன் சினம் கொண்டான். "இன்று இந்திரசித்து இறந்ததைப்போல நாளை இராவணனும் இறக்கப்போகிறான் என்று மனைவி கூறியதும் இதற்கெல்லாம் காரணம் சீதைதான். எனவே நான் அவளை வெட்டப் போகிறேன்'' என்று கூறி இராவணன் வாளை ஏந்திக்கொண்டு செல்கிறான். இதையறிந்த மகோதரன் ஓடிச் சென்று இராவணனை சமாதானப் படுத்துவதை அறிகிறோம்.

இவ்வாறு இராவணன் சோகப்படத்தில் இறந்த தன் மகன் இந்திரசித்தின் உடலின் மீது மண்டோதரி விழுந்து புலம்புவதை அறிகிறோம். இதன்பின் மண்டோதரியை, இராவணன் இறந்த பின்னர்தான், அவன் உடல் மீது விழுந்து புலம்புவதை காணப்போகிறோம்.

# 4. இராவணன் வதைப்படலத்தில் மண்டோதரி

**அ. முன்னுரை**

இராவணன் சோகப் படலத்தின் இறுதியில் தன் மகன் இந்திரசித்தின் இறந்த உடல் மீது விழுந்து புலம்பிய மண்டோதரியின் சோகநிலையை அடுத்து இராவணன் வதைப் படத்திலும் சோக நிலையிலேயே காணுகின்றோம்.

இராமபிரானுக்கும் இராவணனுக்கும் நடந்த இறுதிப் போரில் இராமபிரான் விட்ட பிரமாத்திர அம்பு நான்கு முகங்களைக்கொண்டதாய் இராவணனுடைய மார்பில் புகுந்து உடலெங்கும் குடைந்து அவன் உயிரைப் பருகிவிட்டு, பாற்கடலில் நீராடிப் பின் இராமபிரானின் அம்பறாத் தூணியில் வந்த அடைக்கலம் புகுந்தது.

இதே பிரமாத்திர அம்புதான் ஏழு மாமரங்களைத் துழைத்ததும், வாலியின் மார்பில் புகுந்து வந்ததுமான ஒப்பற்ற அம்பாகும்.

இராமபிரானின் பிரமாத்திரத்தினால் உயிரை இழந்த இராவணன் தேரிலிருந்து தலைகீழாக நிலத்தில் வீழ்ந்தான். அப்போது அவன் முகம் மும்மடங்கு பொலிவுற்றுத் திகழ்ந்தது.

தன் கணவன் இராவணன் இறந்துவிட்டான் என்பதை அறிந்த மண்டோதரி, மலரணிந்த விரிந்த கூந்தலையுடைய அரக்க மகளிர்களுடன் அழுது கொண்டே போர்க்களத்திற்கு ஓடி வருகிறாள்.

**ஆ. இறந்து கிடந்த கணவனைக் கண்டு நின்ற நிலையில் புலம்புதல்**

"அனந்த நூறாயிரம் அரக்கர் மங்கைமார்,
புனைந்த பூங்குழல் விரிந்தரற்றும் பூசலார்,

> இனந்தொடர்ந்து உடன்வர, ஏகினாள் என்ப
> நினைந்ததும் மறந்ததும் இலாத நெஞ்சினாள்''
>
> இரா. வதை. 228

இப்பாடலில் தன் கணவனான இராவணனை மறந்து விடுவதும், பிறகு நினைப்பதும் இல்லாது, எப்பொழுதும் மண்டோதரி தன் உள்ளத்தில் நினைத்துக்கொண்டே இருந்தாள் என்பதைக் கூறவந்த கம்பர், ''நினைந்ததும், மறந்ததும் இலாத நெஞ்சினாள்'' என்று குறிப்பிடக் காணுகின்றோம். தென்னிலங்கைத் தெய்வமான மண்டோதரியைக் கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வமாகக் கம்பர் போற்றுவதை அறிகிறோம்.

**இ. இராவணன் உடலில் விழுந்து மண்டோதரி புலம்புதல்**

> ''தரங்கநீர் வேலையில் தடித்து வீழ்ந்தென
> உரங்கிளர் மதுகையாள் உரத்தின் உற்றனள்''
>
> இரா. வதை. 237

மேற்கண்ட பாடலிலே, மண்டோதரி தன் கணவன் உடலில் மீது விழுந்த நிலையை உவமையோடு கம்பர் எடுத்துக் கூறக் காணுகின்றோம். ''அலைகள் வீசுகின்ற நீரையுடைய கடலிலே மின்னல் வீழ்ந்தாற் போல, மண்டோதரி கணவன் உடலின் மீது, விழுந்தாள்'' என்று கம்பர் குறிப்பிடுகிறார். மேலும் மண்டோதரி மனவலிமையோடு உடல் வலிமையும் பெற்றவள் என்பதை

> ''உரங்கிளர் மதுகையாள் உரத்தின் உற்றனள்''

என்றும் சொல்லக் கேட்கிறோம்.

உடலின் மீது விழுந்த மண்டோதரி ''அம்மவோ! அம்மாவோ!'' என்று கதறுகிறாள். உறுதியான என் மனதைக் குலைத்து விட்டாயே! கிரீடம் தரித்த பத்துத் தலைகளோடு முகங்களும் தரையில் படிந்திருப்பதைக் கண்டு வேதனையடைகின்றேன். இவையெல்லாம் தீவினையின் விளைவேயாகும் என்று கூவி அழுகின்றாள்.

### ஈ. இராமபிரானுடைய அம்பு இராவணனுடைய உயிரிருக்குமிடமெல்லாம் துளைத்தல்

"வெள்ளெருக்கம் சடைமுடியான் வெற்பெடுத்த
திருமேனி மேலும் கீழும்
எள்ளிருக்கும் இடமின்றி, உயிர் இருக்கும் இடம்
நாடி, இழைத்த வாரோ?
கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
மனச்சிறையில் கரந்தகாதல்
உள்ளிருக்கும் எனக்கருதி உடல்புகுந்து
தடவியதோ ஒருவன்வாளி?"

இரா. வதை. 239

**பாடல் கருத்து**

வெண்மை நிறமான எருக்கமலர் மாலையணிந்த சடைமுடியை உடைய சிவபெருமான் எழுந்தருளியுள்ள கயிலை மலையைத் தூக்கி எடுத்தவன் இராவணன். அத்தகு ஆற்றல் படைத்த இராவணனுடைய உடம்பில் பாய்ந்த அம்பானது எள்ளவும் இடமில்லாதபடி உயிருள்ள எல்லா இடங்களிளெல்லாம் தேடிச் சென்று பரவியதா? அல்லது மலரணிந்த கூந்தலையுடைய சீதையை எண்ணிய இராவணனுடைய மனமாகிய சிறையில் ஒளிந்திருக்கும் மோகமானது பதுங்கி இருக்குமிடமெல்லாம் அம்பு ஊடுருவிச் செல்ல எண்ணியதா?

இப்படிப் பார்க்கும் போது இராவணனின் அழிவிற்குக் காரணம் சீதையிடம் கொண்டிருந்த காமமே ஆகும் என்பதையும் அது உயிரிருக்கும் இடமெல்லாம் கலந்திருந்தது என்பதை ஆசிரியர் சுட்டிக் காட்டக் காணுகின்றோம்.

இப்பாடலில் வெள்ளெருக்கம் மலரை அணிந்தவன் சிவபெருமான் என்றும், தேனிருக்கும் (கள்ளிருக்கும்) மலரை அணிந்தவள் சீதை என்றும் மண்டோதரி கூறக்

கேட்கிறோம். வெள்ளெருக்க மலர் சிவபெருமானுக்கு உரிய மலராகும். கள்ளிருக்கும் மலரை அணிபவர்கள் மானுடப் பெண்கள் என்பதை கம்பர் மறைமுகமாகச் சுட்டிக் காட்டக் காண்கின்றோம்.

**உ. இராமபிரான் எய்த பிரமாத்திர அம்பின் திறத்தின் விளைவு**

“ஆரம்போர் திருமார்பை அகல் முழைகன் எனத்
திறந்து, இவ்வுலகுக்கு அப்பால்
தூரம் போயின, ஒருவன் சிலை துரந்த சரங்களே,
போரில் தோற்றம்
வீரம்போல், உரம் குறைந்து, வரம் குறைந்து,
வீழ்ந்தானே! வேறே! கெட்டேன்
ஓரம்போய் உயிர் பருகின்ற இராவணனை?
மானுடவன் ஊற்றம் ஈதோ!”

இரா. வதை. 240

ஓரம்போல் = ஓர் + அம்பு + போய்
ஆரம் = முத்துமாலை
முழை = குகை
ஊற்றம் = வலிமை
சிலை = வில்

**பாடல் கருத்து**

“இராமபிரானுடைய வில்லானது அம்புகளை விரைந்து செலுத்த, அவைகள் முத்துமாலை அணிந்த இராவணன் மார்பை பிளவுபடும்படி செய்துவிட்டு இவ்வுலகத்திற்கு அப்பால் சென்றன. அந்த அம்புகளினால் இராவணனுடைய வீரம் நீங்கியது. இராவணன் மனவலிமை குறைந்தது. இராவணன் படைவீரர்களை எல்லாம் இழந்ததோடு சுற்றத்தையும் நீங்கியவனாய் தனியனாய் போர்க்களத்தில் வீழ்ந்து கெட்டான். இராமபானம் இராவணனின் உயிரை

பருகியது. இராமபிரானாகிய மனிதனின் வலிமை இத்தகையதோ?'' இப்படி புலம்பினாள் மண்டோதரி.

**ஊ. இராவண வதத்திற்கு அடிப்படைகள்**

''காந்தயருக்கு அணியனைய சானகியார் பேரழகும்
அவர்தம் கற்பும்
ஏந்துபுயத்து இராவணனார் காதலும்
அச்சூர்ப்பணகை இழந்த மூக்கும்
வேந்தர் பிரான் தயரதனார், பணிதன்னால்
வெங்கானில் விரதம் பூண்டு
போந்ததுவும், கடைமுறையே புரந்தரனார்
பெருந்தவமாய் போயிற்று அம்மா!''
இரா.வ. 241

**பாடல் கருத்து**

இப்பாடலில் மண்டோதரி புலம்பியவாறே, தன் கணவன் இராவணனின் சங்காரத்திற்கு ஆறு காரணங்கள் வெளிப்படுத்துகிறாள்.

பெண்களுக்கெல்லாம் அணி போலவிளங்கும் சீதாப் பிராட்டியின் பேரழகும் அவளுடைய ஒப்பற்ற கற்பின் உறுதியும், இராவணன் தன் மனதிலே சிறை வைத்த சீதையின் காமமும், இலக்குவனனால் சூர்ப்பணகை இழந்த மூக்கும், தசரதன் கட்டளைப்படி இராமன் பல புண்ணிய நதிகளில் நீராடக் காட்டிற்கு வந்ததும், இந்திரன் செய்த தவப்பயனுமே என்னுடைய கணவன், இராவணன் இறப்பதற்குக் காரணங்களாகும் என்று மண்டோதரி புலம்பித் தவித்தாள்.

**எ. இராவணனுடைய முடிவு காலத்தை நிர்ணயிக்க வந்தவன் இராமபிரான்**

''தேவர்களுக்கும், அட்டதிக்கு யானைகளுக்கும் சிவபெருமானுக்கும், திருமாலுக்கும், மற்றையோர்க்கும்

மேலான வலிமையுடையவன் என் கணவனாகிய இராவணன் என்று எண்ணினேன். நான் கொண்ட இறுமாப்பை நீக்க வந்த இராமனாகிய மானுடன் பெருந்தவத்தைச் செய்தவன் என்பதை அறியாமல் போய்விட்டேனே! என்னுடைய கணவன் பெற்ற வரங்களையெல்லாம் போக்குதற்கு, தான் பெற்ற தவத்தினால் இராமன், தென்னிலங்கை நோக்கிக் கால்நடையாக வருவான் என்பதை நான் அறியவில்லையே" என்று வருந்திப் புலம்பினாள் மண்டோதரி.

இரா. வ.ப. 242

**ஏ. வரம் எனப்படும் பாற்கடலை சீதை என்னும் ஊழி அழித்துவிட்டது**

மூன்றரைக்கோடி ஆயுளும், பெருவலிமை மிக்க புயத்தையும் என் கணவராகிய இராவணன் பெற்றவர். அவருக்கு அழிவே இருக்காது என்று எண்ணினேன்! அப்படி வரத்தைப் பெற்ற பாற்கடலை சீதையிடத்தில் கொண்ட காமமாகிய பிரையானது அழித்துவிட்டதே! என்று புலம்பியழுதாள் மண்டோதரி. இரா.வ.ப. 243

**ஐ. மன்மதன் செயலால் உலக இயல்பை அறிய முடியவில்லையே**

"ஆர்அனார் உலகியற்கை அறித்தக்கார்? அவை
ஏழும் ஏழும் அஞ்சும்
வீரனார் உடல்துறந்து விண்புக்கார், கண்புக்க
வேழ வில்லால்
நாரநாண் மலர்க்கணையால் நாள் எல்லாம் தோள்
எல்லாம் நைய எய்யும்
மாரனார் தனிஇலக்கை மனித்தனார் அழித்தனரே,
வரத்தினாலே!"

இரா.வ. 244

வேழவில் - கரும்புவில்

ஆர்அனார் - யார் அறிய முடியும்?

அவை - கடல்
ஏழும் ஏழும் - பதினான்கும்

**பாடல் கருத்து**

ஈரேழு பதினான்கு உலகமும், அஞ்சுதற்குரிய வீரனாகிய இராவணன், இப்பொழுது இறந்து விண்ணுலகம் சென்று விட்டார். கரும்புவில் கொண்டு, மலர்களாகிய அம்பால் நாள்தோறும் ஆண்கள் பெண்கள் தோள்களை நையும் படியாக இணைத்து இன்பம் அடையச் செய்யும் இயல்புடைய மன்மதனும் ஒதுங்கிவிட்டதால் மனிதனான இராமன் இப்பொழுது என் கணவனான இராவணனை தன்பலத்தினால் வென்ற விட்டாரே! மன்மதன் இயல்பையும், உலக இயற்கையையும் யாவரால் அறிய முடியும்? ஒருவராலும் அறிய முடியாது! என்று கூறி மண்டோதரி தேம்பித் தேம்பி அழுதாள்.

மேற்கண்ட பாடலில் இராவணன் நினைத்த இன்பச் செயலை, நடத்த மன்மதன் ஒதுங்கிவிட்டதால் மன்மதனை ஆசிரியர் மாரனார் என்று குறிப்பிடக் காணுகின்றோம்.

**ஓ. இராமன், நாராயணனே! என்பதை அறியாது துன்பச் செயல் புரிந்தாய்! கெட்டாய்!**

"ஆரா அமுதாய் அலை கடலில் கண்வளரும்
நாராயணன் என்று இருப்பேன் இராமனை நான்,
ஓராதே கொண்டு அகன்றாய்! உத்தமனார் தேவிதனைப்
பாராயோ! நின்னுடைய மார்பு அகலம் பட்டவெல்லாம்"

இரா.வ. 245

**பாடல் கருத்து**

"தெவிட்டாத அமுதம் போன்றவனும், பாற்கடலில் துயிலும் நாராயணன் தான் இராமனாவான் என்பதை நான் அறிகின்றேன். நீ அறியவில்லை! எனவே நீ சீதையைக்

கவர்ந்து கொண்டு வந்தாய். அதனால் உன் அகன்ற மார்பில் அம்பை ஏற்றுத் துன்புற்றாய்! இறந்து கிடக்கும் நீ இதனை எப்படி அறியப்போகின்றாய்?'' என்று கூறி புலம்பினாள் மண்டோதரி.

**ஓ. இறந்த இராவணனைக் கட்டித் தழுவி மண்டோதரி உயிரை விடுதல்**

''என்று அழைத்தனன், ஏங்கி எழுந்து அவன்
பொன்தழைத்தன, பொருவரு மார்பினைத்
தன் தழைக்கை களால்த் தழுவித் தனி
நின்று அழைத்து உயிர்த்தாள், உயிர் நீங்கினாள்!''

இரா. வ. 246

**பாடல் கருத்து**

இவ்வாறு பல சொல்லித் தேம்பி அழுத மண்டோதரி ஏங்கிக் கொண்டு எழுந்தாள். பின் மறுபடியும் பொன் கலன்கள் பொருந்தியுள்ள எழிலுடைய தன் கணவனின் மார்பினை தளிர் போன்ற தன் கரங்களால் தழுவி ஓல மிட்டாள். பின் தனித்து நின்றும் வாய்விட்டும் புலம்பி மார்பில் விழுந்து பெருமூச்சுவிட்டு தன் உயிரையும் நீத்தாள்.

**ஔ. தன் கணவன் மார்பில் விழுந்து உயிரைவிட்ட கற்புடைய மண்டோதரியைப் பலரும் புகழ்தல்**

''வானமங்கையர், விஞ்சையர், மற்றும் அத்
தானமங்கைய ருழ்தவப் பாலவர்,
ஆன மங்கையரும் அருங்கற்புடை
மான மங்கையர்தாமும் வழுத்தினார்''.

இரா.வ. 247

**பாடல் கருத்து**

வானுலகத்து மங்கையரும், விஞ்சையரும், மற்றும் அந்த பாதலத்தில் உள்ள மங்கையரும், தவத்தில் சிறந்த

முனிவர்களின் பத்தினியரும், அரிய கற்புடைய பெருமை மிக்க இவ்வுலகத்தின் மங்கையர்களும், தன் கணவன் மார்பில் விழுந்து இறந்த மண்டோதரியின் உயர்ந்த கற்பின் திறத்தை வாயார வாழ்த்தினார்கள்.

***

## 5. முடிவுரை

கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல் என்று கூறித் தன் கணவனான ஆரியப்படை கடந்த நெடுஞ் செழியன் இறந்த நிலையில் உயிர்விட்ட கோப்பெருந் தேவிருக்கு வழிகாட்டியாகத் திகழ்ந்தவள் மண்டோதரி ஆவாள்.

சீதை, தாரை, அகலிகை, பாஞ்சாலி, மண்டோதரி ஐவரும் பஞ்சகன்னியர் என்று பொதுவாகப் போற்றப் படுவதை அறிகிறோம்.

பஞ்ச கன்னியர்களில் சீதை, தாரை, அகலிகை, மண்டோதரி நால்வர்கள் கம்பராமாயணத்திற்கு அணிகலன் களாகத் திகழ்பவர்கள்.

மேலும் தன் கணவருடன் உயிர்துறந்த மண்டோதரி ஏழு பத்தினிப் பெண்டிர்களில் ஒருத்தியாகப் போற்றப் படுகின்றாள். சீதை, தாரை, மண்டோதரி, அகல்யை, திரௌபதி, நளாயினி, அருந்ததி ஆகியோர் சப்த கன்னியர் ஆவர்.

இவ்வாறு மண்டோதரி இராமாயணத்தில் சுந்தர காண்டத்திலும், யுத்த காண்டத்திலும் கம்பரால் படைக்கப் பெற்று, கற்பு நிலையை உயர்த்திக் காட்டக் காணு கின்றோம்.

***



புதுச்சேரி கம்பன்விழா மண்டபத்தில் 9.5.2008 வெள்ளிக்கிழமை காலை 10 மணிக்கு அருப்புக்கோட்டை அருட்கவிஞர் காசி. எம்.ஏ இயற்றிய 'கம்பராமாணயத்தில் விதியும் ஊழ்வினையும்' என்ற நூலை புதுச்சேரி மாநில முதல்வர் திரு.ரங்கசாமி அவர்கள் வெளியிட்டபோது எடுத்த படங்கள்